# ஞானசம்பந்தம்

தருமையாதீனத் திங்கள் இதழ்

மலர் 38 ]　சித்தார்த்தி ஆண்டு புரட்டாசித்திங்கள் 10—10—79　[ இதழ் 11

வைத்தீசுவரன்கோயில்



ஸ்ரீ செல்வமுத்துக்குமாரசுவாமி

(கந்தஷஷ்டித்திருவிழா 21—10—79 முதல் 30—10—79 வரை)

திருமையாதீனக் குருமுதல்வர்



ஸ்ரீலஸ்ரீ குருஞானசம்பந்த சுவாமிகள்

உ
குருபாதம்

# "ஞானசம்பந்தம்"

தருமையாதீனத் திங்கள் இதழ்

மலர் 38 | 10-10-79 | இதழ் 11

## உட்பொருள்



உ
குருபாதம்

### ஸ்ரீ குருஞானசம்பந்தர் அருள்வாக்கு

—★—

நோயால் வருந்தியுனை
நூறுகுரல் கூப்பிட்டால்
நீயாரெ ைறதிருக்கை
நீதியோ – தாயாய்
அலைகொடுத்த கேழல்
அருங்குழவிக் கன்று
முலைகொடுத்தாய்
நீயலவோ முன்.

—சொக்கநாத வெண்பா. 57

ஆசிரியர் :-
வித்துவான்
இராமலிங்கத் தம்பிரான் சுவாமிகள்

துணையாசிரியர் :-
மகாவித்துவான்
சி. அருணைவடிவேல் முதலியார்.

ஆண்டுச் சந்தா உள்நாடு ரூ. 9.
ஆண்டுச் சந்தா சிலோன் ரூ. 11.
ஆண்டுச் சந்தா வெளிநாடு ரூ. 17.
ஆயுள் சந்தா உள்நாடு ரூ. 100.
ஆயுள் சந்தா வெளிநாடு ரூ. 125.

உ

குருபாதம்

# ஞானசம்பந்தம்

மலர் 38 | சித்தார்த்தி - புரட்டாசி - 10—10—79 | இதழ் 11

திருச்சிற்றம்பலம்

பொன்தயங் கிலங்கொளிந் நலங்குளிர்ந்த புன்சடை
பின்தயங்க ஆடுவாய்! பிஞ்ஞகா! பிறப்பிலீ!
கொன்றையம் முடியினாய்! கூடலால வாயிலாய்!
நின்றயங்கி யாடலே நினைப்பதே நியமமே. — சம்பந்தர்.

திருச்சிற்றம்பலம்

## தீபாவளித் திருநாள் சிந்தனை

### இந்திய கலாசாரம்

இமயம் முதல் குமரி வரை இந்திய மக்களால் பெருஞ்சிறப்புடன் கொண்டாடப்பெற்றுவரும் தேசியத் திருவிழா தீபாவளி. மொழி, இனம், கலாசாரம் போன்றவற்றால் வேறுபட்டிருப்பினும், இந்தியாவில் வாழும் இந்துமதத்தவர் அனைவராலும் சிறுசிறு வேறுபாடுகளோடு தீபாவளிப் பண்டிகை மகிழ்வோடு போற்றிக் கொண்டாடப்பெறு வதைக் காணலாம். இந்திய கலாசாரத்தின் சிறப்புக் கூறுகள், மக்கள் மேற்கொள்ளும் விரதங்களும், பக்தி சிரத்தையோடு அவர்கள் கொண்டாடும் பண்டிகைகளுமேயாகும். தீபாவளிப் பண்டிகை எப்போது, எங்கே கொண்டாட்டமாக மலர்ந்தது என்பதுபற்றியோ, இப்பண்டிகைக்கு உண்மையான பின்னணி என்ன என்பதுபற்றியோ தெளிவாக அறிந்துகொள்ள உரிய சான்றுகள் ஏதும் கிடைத்தில.

தென்னாட்டுத் திராவிடப் பெருமக்களால் இப்பண்டிகை மிகப் பிற்காலத்தில்தான் மேற்கொள்ளப்பெற்றிருக்கவேண்டும். ஆயின் பல்வேறு இலக்கியச் சான்றுகள் தீபாவளிப் பண்டிகையின் தொன்மையை 1600 ஆண்டுகளுக்கு முற்பட்டதாகக் காட்டுகின்றன.

## யக்ஷராத்திரி

இதுவரை கிடைத்திருக்கும் சான்றுகளில் கி. பி. 400 க்கு முற்பட்டவர் என்று கருதப்படும் வாத்ஸ்யாயனர் நூலில் தீபாவளியைப் பற்றிய முதற் குறிப்பினைக் காணமுடிகிறது. அந்நூல் தீபாவளிப் பண்டிகையை 'யக்ஷராத்திரி' என்று குறிக்கிறது. இது கார்த்திகைத்திங்கள் அமாவாசை அன்று இரவில் கொண்டாடப்பெறுவது. இதுவே ஆண்டின் கடைசிநாள். இதனைச் 'சுகராத்திரி' என வழங்குதலும் உண்டு என வாத்ஸ்யாயனர் குறிப்பிடுகின்றார். வடநாட்டில் விக்கிரம ஆண்டு என்ற ஒரு தொடராண்டு நிலவுகின்றது. தீபாவளியின் மறுநாளையே விக்கிரம ஆண்டின் முதல்நாள் எனக் குறிக்கின்றனர். இன்று ஐப்பசித்திங்களில் அமாவாசைநாளில் தீபாவளி கொண்டாடப்பெறுதலை அறிவோம். கார்த்திகையில் நடைபெற்ற இவ்விழா ஐப்பசிக்கு எப்போது மாறியது என்பதுபற்றி அறிய ஏதும் சான்று கிடைத்திலது.

## தீபமாலாவர்ணனம்

திருமணம் செய்துகொடுக்கப்பெற்ற தம் மகளையும் மருமகனையும் தம் இல்லத்திற்கு அழைத்துப் புத்தாடைகளை வழங்கும் திருநாளாகத் தீபாவளியை ஸ்ரீ ஹர்ஷரின் (கி. பி. 606-648) 'நாகநந்தா' என்ற நூல் குறிப்பிடுகின்றது. இந்நூல் தீபாவளியைத் 'தீபப்பிரதிபதி உத்ஸவம்' எனப் பேசுவதைக் காணலாம். தலைதீபாவளிக்கு மாப்பிள்ளையை மகளொடு அழைத்துவந்து சிறப்பிக்கும் இன்றைய நிலை 1400 ஆண்டுகளுக்கு முற்பட்ட பழைய வழக்கே என்பதை ஸ்ரீ ஹர்ஷரின் நூலால் அறிகிறோம் கி. பி. 500 க்கும் 800 க்கும் இடைப்பட்ட காலத்தது என்று கருதத்தக்க காஷ்மீரநூல் ஒன்று (Nilamat Purana) இப்பண்டிகை கார்த்திகையில்தான் கொண்டாடப்பெற்றது என்பதை வலியுறுத்துகின்றது. தீபாவளியை இந்நூல் 'கார்த்திக அமயம் தீபமாலா வர்ணனம்' என்று பேசுகின்றது. வீடுகள் தோரணங்களால் அலங்கரிக்கப்பெற்றன; தீபங்கள் நிரல்பட ஏற்றப்பட்டன; மக்கள் புத்தாடைகளைப் பிராமணர்கள், நண்பர்கள், மற்றும் உறவினர்களுக்கு வழங்கி அவர்களோடு கூடி விருந்துண்டு மகிழ்ந்தனர்; பெண்கள் புதிய ஆபரணங்கள் பூண்டு, பாட்டுக்கள் பாடி நடனமிட்டு மகிழ்ந்தனர் என்றெல்லாம் இப்பண்டிகைபற்றிய

நடைமுறை அமைப்பினை இக்காஷ்மீரநூல் முதன்முதலாகத் தெளி வாக விவரிக்கிறது.

## தீபோத்ஸவம்

மகாநவராத்திரிக்குப்பின், வீடுகளுக்கு வெள்ளையடிக்கப்பெற்று, விளக்கேற்றி, ஆடவரும் பெண்டிரும் மகிழ்ந்து கொண்டாடும் 'தீபோத்ஸவம்' என்ற ஒரு பண்டிகைபற்றி கி, பி. 10 ஆம் நூற்ருண்டின் இடைப்பகுதியில் வாழ்ந்த 'சோமதேவசூர்' என்பார் தமது 'யக்ஷதிலகன் சம்பு' என்ற நூலில் குறித்துள்ளது தீபாவளியே என்பது தெளிவு,

## தீவாளி

கி. பி. 10 ஆம் நூற்ருண்டுக்குப் பிற்பட்ட நூல்களில் தீபாவளி பற்றிய கேளிக்கைத்தன்மைகள் விவரிக்கப்படுவதோடு இப்பண்டிகை யின் பின்னணியாகப் பல்வேறு தெய்விகக் கோட்பாடுகளும் பேசப் படுகின்றன. ஸ்ரீபதியின் (கி. பி. 1030) ஜோதிஷரத்னமாலாவில் இப்பண்டிகைபற்றிய குறிப்பு உண்டு, அல்பர்ணி தாம் எழுதிய தாகிக்-இ- ஹிந்து ((Enquiry Into India) என்ற நூலில் இப்பண்டிகை யைத் "தீபாளி" (Dibali) என்று குறித்து, தீப அலங்காரங்க ளோடு மக்கள் இந்நாட்களில் திருக்கோயில் வழிபாடு நிகழ்த்துவர் என்பதையும் குறிக்கிருர். குஜராத் மாநிலத்தவரான ஹேமசந்த் (கி. பி. 1108 - 1172) தமது 'தாரத்னமலா' என்ற நூலில் தீபாவளிப்பண்டிகையை, யக்ஷராத்திரி, ஜகராத்திரி என்று குறிப்ப தோடு அமையாது, "தீவாளி" (Divali) என்றும் குறிக்கின்ருர். எனவே வாத்ஸ்யாயனர் குறித்த யக்ஷராத்திரியும் தீபாவளியும் ஒன்றே என்பதனை இக்குறிப்பால் உணரமுடிகிறது.

## எண்ணெய்ஸ்நானம்

தென் இந்தியாவில் தீபாவளிபற்றிய முதற் குறிப்பினை கி பி. 1119 இல் வாழ்ந்திருந்த சாளுக்கிய திருபுவனமல்லனின் கன்னடக் கல்வெட்டு ஒன்றே வழங்குகின்றது. தமது அன்புக்குரிய சாத்யா யனர் என்ற அறிஞர்க்கு ஆண்டுதோறும் தீபாவளியில் இம்மன்னன் உயரிய பரிசுகளை வழங்கினுன் என்று இக்கல்வெட்டால் உணரப் படுகின்றது. மகாராஷ்டிரத்தில் வாழ்ந்திருந்த சிறந்த ஞானியாகிய ஞானேஸ்வரரின் (1290) ஞானேஸ்வரி என்ற நூலிலும் தீபாவளி பற்றிய குறிப்பு உண்டு. தீபாவளியன்று எண்ணெய்தேய்த்து நீராடுவது என்ற குறிப்பு மராத்திநூல் 'லீலாவதி' (1250)யில்தான் முதன்முதலாகப் பேசப்படுகின்றது.

## மகாலட்சுமி பூஜை

வடநாட்டில் மகாராஷ்டிரத்திலும், குஜராத்திலும் இன்றும் தீபாவளி பெருஞ்சிறப்போடு கொண்டாடப்பட்டுவருதல் நாம் அறிந்ததே. செல்வத்தை வழங்கும் மகாலட்சுமிக்குப் பூஜை செய்வித்து, புத்தாண்டு தினமாகப் புதுக்கணக்கு எழுதி இப்பண்டிகையை வடநாட்டில் கொண்டாடுகின்றனர். 1305-ஐ ஒட்டிவாழ்ந்த பெத்துஸ்கா என்பவரின் 'பிரபந்த சிந்தாமணி' என்ற நூல் இந்நாளில் மகாலட்சுமிக்கு நகைகள் அணிவித்து வழிபடுதல் வழக்கம் என்பதை முதன்முதலாகக் குறிக்கின்றது. விஜயநகர ஆட்சிபற்றிக் கூறும் ஒரு நூலில் (Akasabhairavakapa) இத்திருநாள் மன்னனின் வெற்றி மற்றும் செல்வவளம் குறித்து இரண்டு நாட்களுக்குக் கொண்டாடப் படுவது என்றும், மன்னன் இந்நாட்களில் ஸ்ரீ மகாலட்சுமிக்கு மூன்று விளக்குகள் ஏற்றி வழிபடுவான் என்றும், பரிசளிப்பும் கேளிக்கைகளும் அரண்மனையில் நடைபெறும் என்றும் விவரிக்கக் காணலாம். அபுல் பசலின் 'அயினி அச்பரி' என்ற நூல் இதனை வைசியர்களின் சிறந்த பண்டிகை என்று குறிக்கிறது.

நரகாசுரன் என்பான் மக்களுக்கும், தேவர்களுக்கும் பெருந்துயர் விளைத்தான் என்றும், திருமால் அவனைக் கொன்றார் எனவும், இறக்கும் தருவாயில், திருமாலை நோக்கிச் சதுர்த்தசியாகிய இந்நாளில் எண்ணெய் முழுக்காடி, புத்தாடை உடுத்தி, திருமாலாகிய நின்னை வணங்குவோர்க்கு எல்லா நலங்களும் செழிக்க நீ அருளவேண்டும் என்று வேண்டிக்கொண்டான் என்றும், திருமாலும் அங்ஙனமே அருளினார் எனவும் ஒருகதை கேட்கப்படுகிறது. இதனை ஒட்டி ஐப்பசி தேய்பிறையின் பதினான்காம் நாளினை நரகசதுர்த்தசி ஸ்நானம் எனவும், மறுநாள் அமாவாசை அன்று தீபாவளிப்பண்டிகை எனவும் கொண்டாடும் முறை தற்போது நிலவி வருகிறது.

## கார்த்திகை விளக்கீடு

தமிழ்நாட்டில் தீபாவளி பெருஞ்சிறப்பாக நடைபெற்று வருவதை அனைவரும் அறிவர். எண்ணெய் முழுக்கு, புத்தாடை அணிதல், பலகாரங்கள் செய்து உண்டல், மத்தாப்பு வெடிகள் கொளுத்தி மகிழ்தல் போன்றன தமிழ்நாட்டில் வழக்கில் உள்ளன. ஆயினும் தீபம் ஏற்றுதல் என்ற முறை தமிழ்நாட்டில் இல்லை. தீபாவளிக்கு மாறாக அடுத்துவரும் கார்த்திகைத்திங்கள் கார்த்திகை விண்மீனன்று தீபம் ஏற்றுதல் தமிழ்நாட்டில் வழக்கில் உள்ளது. வாத்ஸ்யாயனர் மற்றும் வடநாட்டு நூலாசிரியர்களின் தீபாவளிபற்றிய ஆரம்பகாலக் குறிப்புகள் இத்திருநாள் கார்த்திகையில் கொண்டாடப்பெற்றதாகக்

குறித்துள்ளமை கொண்டு நோக்கும்போது கார்த்திகை விளக்கீடே, தமிழகத்தில் பண்டைக்காலத்துத் தீபாவளித் திருநாளாக இருந்திருக்கலாமோ எனக் கருத இடமுள்ளது. சங்க இலக்கியத்திலும், திருஞானசம்பந்தர் தேவாரத்திலும் கார்த்திகை விளக்கீடு பற்றிய குறிப்புக்கள் உண்டு. ஆனால் தீபாவளி என்ற குறிப்பு அண்மைக் கால இலக்கியங்களிலும்கூட இடம்பெறவில்லை

## இன்புற்று மகிழ்வோம்

எங்ஙனமாயினும், தீபாவளி மிகச் சிறப்பாக மகிழ்வோடு கொண்டாடப்பெற்றுவருவது ஒருதலை. தீமை அகன்று நன்மை மலர்வதே விழாக்களின் நோக்கமாகும். இருள் கடிந்து ஒளிவெள்ளம் பரவும் குறிப்பே அறியாமை அகன்று அறிவு சிறத்தலின் அறிகுறியாகும். எனவே, இறைவன் திருவருளை நினைந்து, புனித நீராடி, புத்தாடை உடுத்தி, விருந்தயர்ந்து எல்லோரும் இன்புற்று மகிழ்வோமாக.



---

## கடிதம்

செந்தமிழ்ச்செல்வர்,

### திரு. கி. வா. ஜகந்நாதன் எம். ஏ.,

சிவநெறியில் தளராமல் தினம்புரக்கும் திருவுடையோய்.
அவநெறியில் சாராமல் அருளுரைசொல் தேசிகனே.
தவநெறியில் சிறந்திருக்கும் சண்முகதே சிகப்பெயரோய்,
பவமகல வழிகாட்டும் பண்ணவனே, என்வணக்கம்.

பதினெட்டுப் புயமுடைய பரமேசை தனக்கங்கே
சதசண்டி வேள்வியினைத் தக்கமுறை யினில்நடத்தி
இதப் உலகு பெறும்வண்ணம் ஏற்பனசெய் திடலறிந்தேன் ;
பதமகற்றும் பிரசாதம் வரப்பெற்றேன் மிகநன்று.

செந்தமிழும் சிவநெறியும் தினந்தோறும் தழைத்துவரச்
செந்தவழி என ஆய்ந்தே இயற்றுகின்றாய் ; தெய்வஅருள்
முந்தளங்கும் பரவுகின்ற முயற்சிகளைச் செய்கின்றாய்
சிந்தையெலாம் சிவமாகத் திகழ்கின்றாய் ; வாழியவே.

உ

குருபாதம்

திருக்கயிலாய பரம்பரைத் தருமையாதீனம்

**26-ஆவது குருமகாசந்நிதானம்**

# ஸ்ரீலஸ்ரீ சண்முக தேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகள்

**குத்தங்குடி**

**ஸ்ரீ பெரியநாயகி உடனுகிய ஸ்ரீ கோடீசுவரர் திருக்கோயில்**

**மகாகும்பாபிஷேக விழாவின் முதல்நாள்**

வழங்கியருளிய

# ஆசியுரை

**15—9—79**

"குத்தங்குடி வேதி குடிபுனல்சூழ்
குருந்தங்குடி தேவன் குடிமருவும்
அத்தங்குடி தண்டிரு வண்குடியும்
அலம்புஞ்சலந் தன்சடை வைத்துகந்த
நித்தன் நிமலன் உமையோடுங்கூட
நெடுங்கால முறைவிடம் என்றுசொல்லாப்
புத்தர்புறங் கூறிய புன்சமணர்
நெடும்பொய்களை விட்டு நினைந்துய்மினே."

என்பது திருஞானசம்பந்தர் இத்தலத்தைப் பற்றிப் பாடியருளிய தேவாரத் திருப்பாடலாகும்.

**வைப்புத் தலம் என்றால் என்ன ?**

தேவாரப் பாடல் பெற்ற சிவதலங்களைப் 'பாடல் பெற்ற தலம்' எனவும் 'வைப்புத்தலம்' எனவும் இருவகையாகப் பகுத்துக் கூறுதல் மரபு. தமக்கெனத் தனிப்பதிகங்களைப் பெற்றுள்ள தலங்கள் பாடல் பெற்ற தலங்கள் எனவும், தமக்கெனத் தனிப்பதிகத்தைப் பெறாது பிறதலத்திற்குரிய பதிகங்களிலோ பொதுப் பதிகங்களிலோ இடம் பெற்ற தலங்கள் வைப்புத் தலங்கள் எனவும் வழங்கப்பெறுகின்றன. அருளாளர்களின் பாடல்களில் வைத்துப் பாடியமையால் வைப்புத் தலங்கள் எனப் போற்றப்பெறுகின்றன.

தனிப்பதிகங்களைப் பெற்றுள்ள தலங்கள் இந்திய நாட்டிலும் ஈழநாட்டிலும் ஆக 274 தலங்கள் உள்ளன. வைப்புத் தலங்களாகக் குறிக்கப் பெறுவன 237 ஆகும். அவற்றுள் குத்தங்குடி என்னும் இத்தலம் வைப்புத் தலமாகத் திருஞானசம்பந்தர் பாடியருளிய க்ஷேத்திரக் கோவைத் திருப்பதிகத்தில் குறிக்கப் பெற்றுள்ளது.

**ஊரின் பெயரும் உண்மைக்காரணமும் :**

நம்நாட்டில் வழங்கப்பெறும் தலங்களின் பெயர்கள் பலவும், அவை அமைந்துள்ள குறிஞ்சி, பாலை, முல்லை, மருதம், நெய்தல் என்னும் நில அமைப்பை ஒட்டியோ, அவற்றுள் மிகுந்துள்ள கருப்பொருள்களைப் பற்றியோ, அங்கு வழிபட்டோர் பெயரொடு அமைந்த திருக்கோயிலைப்பற்றியோ அமைந்துள்ளவற்றை அறியலாம்.

குறிஞ்சிநிலத் தலங்கள் - மலை குன்றம் அறை பருப்பதம் என்ற பெயர்களாலும், முல்லைநிலத் தலங்கள் - காடு வனம் பாடி என்ற பெயர்களாலும். மருதநிலத் தலங்கள் - ஊர் ஆறு துறை முதலிய பெயர்களாலும், நெய்தல்நிலத் தலங்கள் - பட்டினம் வாயில் முதலிய பெயர்களாலும் பெரும்பாலும் வழங்கப்பெறுகின்றன. சிறுபான்மை மாறியும் வழங்கப்பெறுகின்றன.

அவற்றுள் குடியிருப்பு என்னும் பொருளில் 'குடி' என்னும் சொல்லை ஈற்றில் கொண்டுள்ள தலங்கள் பலவாகும். சிறுகுடி, செங்காட்டங்குடி, விற்குடி, வேள்விக்குடி, வேதிகுடி, கற்குடி, கருக்குடி முதலிய ஊர்கள் 'குடி' என்றபெயரோடு வழங்கப்பெறுவன. அறுபான்மும்மை நாயன்மார்களில் மாறனூர் திருவவதாரம் செய்தருளியதலம் 'இளையான்குடி' என்னும் ஊராகும். அவ்வூர்ப் பெயரையும் அவர் பெயரோடு இணைத்து இளையான்குடி மாறநாயனார் என்று அவரை நாம் வழங்குகின்றோம். 'குடி' என்ற முடிபுடைய தலங்களைத் திருநாவுக்கரசு சுவாமிகள் அடைவு திருத்தாண்டகத்தில்,

" நற்கொடிமேல் விடையுயர்த்த நம்பன் செம்பங்
குடி நல்லக் குடிநளிநாட் டியத்தான்குடி
கற்குடி தென் களக்குடி செங்காட்டங்குடி
கருந்திட்டைக்குடி கடையக்குடி காணுங்கால்
விற்குடி வேள்விக்குடிநல் வேட்டக்குடி
வேதிகுடி மாணிகுடி விடைவாய்க்குடி
புற்குடிமா குடிதேவன் குடிநீலக்குடி
புதுக்குடியும் போற்ற இடர் போகுமன்றே."

என்று அருளிச்செய்கின்றார்.

## குத்தங்குடி ஓர் ஆய்வு

குத்தன்குடி என்னும் இத்தலம் கொத்தங்குடி என வழங்கப் பெறுகிறது. தில்லைக்கருகில் விளங்கும் கொற்றவன்குடி என்னும் தலம் மருவி கொத்தங்குடி என வழங்கப்பெறுகிறது. அதுபோலக் குத்தங்குடி என்னும் இவ்வூர் 'குப்தன்குடி' என்றசொல்லின் திரிபாக இருத்தல் வேண்டும். குப்தன் எனும் பெயருடைய தலைவன் ஒருவன் வாழ்ந்த இடம் எனும் பொருளில் இது வழங்கியிருத்தல் வேண்டும் குப்தன்குடி என்பது பிற்காலத்தில் குத்தன்குடி என்ருயிற்று. சப்தம் என்பது சத்தம் என்ருவதுபோல, குப்தன் என்னும் சொல் குத்தன் என்ருவது இயல்பே. அல்லது வேறு பொருள்களிலும் இப்பெயர் வழங்குவதாகலாம். அறிஞர்கள் ஆராய்ந்து காண்பார்களாக.

## மெய்ஞ்ஞான விளக்கமே விஞ்ஞான வளர்ச்சி :

இங்குப் பேசிய திருவெண்காடு ஸ்ரீநிவாசம் பிள்ளை அவர்கள் அருளாளர்கள்வாழ்ந்த அல்லது பாடிய தலங்களில். அருட்கதிர்களின் அலைகள் வீசிக்கொண்டிருக்கும் என்பதைக் குறிப்பிட்டார். இது உண்மை.

கண்களுக்குப் புலனுவது பருமை; கருத்திற்குப் புலனுவது நுண்மை. அருள் நுண்மையானது அது கருத்திற்கு மட்டுமே புலனுகும் பொருளாகும். இன்றைய உலகில் விஞ்ஞானத்தினுல் எத்தனையோ காரியங்களை எளிதாகச் செய்வதைக் காண்கிருேம். அதேபோல் அக்காலத்தில் மெய்ஞ்ஞானிகள் பலசெயல்களைத் தங்கள் அருளாற்றலால் கண்டுகாட்டினர்.

காரில் வெளியே சென்றவர்கள் வீடுதிரும்பியதும், காரில் இருந்த படியே ஒரு பொத்தானை அழுத்திக் கார்ஷெட்டைத் திறக்கிருர்கள். இது விஞ்ஞானக்காட்சி. இதேபோலத்தான் திருமறைக்காட்டில் வேதங்களால் அடைக்கப்பட்டிருந்த கதவுகளை அப்பரடிகள் தேவாரப் பாடல்கள் பாடித் திறக்கச்செய்தார். இது மெய்ஞ்ஞானக் காட்சி. அதுபோல அருளாளர்களின் ஆன்மீக சக்தியின் வலிமையை உணர்த்தும் வரலாறுகளை நம் சமயநூல்கள் பலவற்றிலும் நாம் காண முடியும். உதாரணத்திற்கு ஒருவரலாறு. திருவண்ணுமலையில் குகை நமச்சிவாயர் என்ற ஒருவர் இருந்தார். அவர் குகையில் வாழ்ந்து வந்ததால் குகை நமச்சிவாயர் எனப்பெயர்பெற்றுர். அவருக்கு ஒரு சீடர் இருந்தார். அவர் பெயர் குரு நமச்சிவாயர். ஒரு நாள் அக்குரு நமச்சிவாயர் தம் குருநாதருக்கு விசிறிக்கொண்டிருந்தார். இரவு 11 மணி இக்கும். விசிறிக் கொண்டிருந்தசீடர் திடீரென்று விசிறியைக்

கீழே போட்டுவிட்டுக் கையைத் தேய்த்தார். குருநாதர் சீடரைப் பார்த்து 'என்னப்பா? என்ன நடந்தது?' என்ருர். குருநமச்சிவாயர் "சிதம்பரம் திருக்கோயிலில் நடராசப்பெருமான் சந்நிதியில் போடப் பட்டிருந்த திரை தீப்பிடித்துவிட்டது; அணைத்தேன்" என்ருராம். பிறிதொருநாள் திருவாரூரில் நடனமாடிய பெண் வழுக்கி விழுந் ததைத் திருவண்ணுமலையிலிருந்தே பார்த்து நகைத்தார் சீடர். இவற்றை அறிந்த குருநாதர் தம்சீடரை அழைத்து. "நீ இனி பலருக் கும் குருவாக இருந்து உபதேசம் செய்து வாழ்வாயாக" என்று ஆணை பிறப்பித்தார்கள். அதுமுதல் இவர் குருநமச்சிவாயர் என்று வழங்கப் படுகிருர்.

இவ்வரலாற்ருேடு இன்றைய அறிவியலின் நிகழ்ச்சி ஒன்றை உங்கட்கு ஒப்பிட்டுக் காட்டுகின்ருேம். அமெரிக்காவில் கென்னடி முனையிலிருந்து சந்திர மண்டலத்திற்கு அனுப்பப்பட்ட விண்வெளிக் கலத்திற்கு இங்கிருந்துகொண்டே சமிக்ஞைகள் செய்கிருர்கள்; விண் வெளிக் கலத்தின் கதவு திறந்திருக்கிறது மூடுங்கள் என்று அறிவிக் கின்ருர்கள்; தூங்குகின்றவர்களை எழுப்புகிருர்கள். பல்லாயிரக் கணக்கான மைல்களுக்கு அப்பால் நிகழும் நிகழ்ச்சிகளை இயக்கியும் அவற்றினைக் கண்டும் மகிழும் இக்கால விஞ்ஞானிகளின் ஆற்றலை மெய்ஞ்ஞானிகள் ஆன்மீகபலத்தினுல் அன்றே பெற்றிருந்தார்கள். ஞானிகள் முக்காலமும் உணர்பவர்கள். வருங்கால உணர்வுடையவர் மெய்ஞ்ஞானியர் என்பதற்கு ஓர் உதாரணக்கதை சொல்வதுண்டு.

**கோடீசுவரரின் குருபக்தி**

ஓர் ஊரில் கோடீசுவரர் ஒருவர் வாழ்ந்து வந்தார். கோடீசுவரர் மகான்களை மதித்துப் போற்றும் பண்புள்ளவர். ஒருநாள் அவர் வீட்டிற்கு மகான் ஒருவர் வந்திருந்தார். அன்று அந்தச் செல்வந்தர் வீட்டிற்குச் சித்திரகுப்தன் வந்திருந்தான். அவன் கோடீசுவரரின் மகன் தலையெழுத்தைப் படித்துச் சொல்லியும் போனது மகானின் காதுகளில் விழுந்தது. இதை யாராவதுகேட்டு வெளியில் சொன்னுல் சொன்னவர் தலை வெடித்துவிடும் என்று நிபந்தனை கூறிச் சென்ருன் சித்திரகுப்தன். கோடீசுவரரின் மகனுக்கு, இனி ஒரு மாட்டால் ஜீவனம் என்று அவன் தலையில் எழுதப்பட்டிருந்தது. மகானுக்கு மிகவும் வருத்தம். நம்மை ஆதரித்து நம்மீது பக்தி செலுத்தும் இச் செல்வந்தனுடைய குடும்பம் இப்படியா ஆகவேண்டும் என்று வருந்திச் சென்ருர். பதினைந்து ஆண்டுகள் கழித்து மீண்டும் அந்தக் குடும்பத்தின் நிலையைக் காண வந்தார் மகான். கோடீசுவரரின் மகன் செல்வங்களை இழந்து ஒற்றைமாட்டுவண்டி ஓட்டிச் சீவனம் நடத்தும் காட்சியைக் கண்டார். மாடுமட்டும் அவனுக்குச் சொந்தம்;

வண்டி வாடகை வண்டி. அந்த நிலையிலும் அவன் மகானை வரவேற்று உபசரித்தான். மனம் இரங்கிய மகான் அவனை அழைத்து மாட்டை விற்று அந்தப் பணத்தைக் கொண்டு அன்னதானம் செய் என்று சொன்னார். முதலில் தயங்கிய அவன் மகான் பேச்சுக்கு மதிப்புக் கொடுத்து மாட்டை விற்று அப்பணத்தைக் கொண்டு தானதர்மங்கள் செய்தான். இப்போது அவனிடம் மாடு இல்லை. ஒரு மாட்டால் ஜீவனம் என்பது தலைவிதி ஆகையால் தெய்வம் அவனுக்கு ஒருமாடு தந்தது. இரவுநேரம். பெரிய இடபம் ஒன்று அவன்வீட்டு வாயிலில் படுத்திருக்கிறது. மறுநாள் அந்த இடபத்தையும் அவ்வாறே விற்று இன்னும் கூடுதலாகத் தானதருமங்கள் புரியும்படிச் சொன்னார் மகான். அவனும் அவ்வாறே செய்தான். முடிவில் அவன் செய்துவந்த புண்ணியமே அவனைக் காத்தது.

**பெரியவர் வார்த்தையும் அரியதோர் ஆக்கமும்**

பொறையாற்றில் அன்பர் ஒருவர்வீட்டில் இப்படி ஒரு நிகழ்ச்சி நடந்ததாகச் சொல்வதுண்டு. தானதருமங்கள் செய்தும் அறவோரையும் துறவோரையும் போற்றியும் வாழ்ந்தது ஒரு குடும்பம் அந்த வீட்டிற்கு ஒரு பெரியவர் வந்திருந்தார் பொறையாற்றை அடுத்த தரங்கம்பாடியில் ஒரு கப்பல் ஒதுங்கியிருந்தது. கப்பல் தரைதட்டி விட்டதால் அதனை ஏலம் போட்டார்கள். பலரும் ஏலம் கேட்டார்கள். பெரியவர் தாம் தங்கியிருந்த வீட்டுக்காரரை அழைத்து யார் எவ்வளவு கூடுதலாகக் கேட்டாலும் அதற்குமேல் கேட்டுக் கப்பலை ஏலம் எடுக்கும்படிச் சொன்னார். அன்பரும் அவ்வாறே செய்தார். ஏலம் எடுத்த பிறகுதான் அக்கப்பலில் ஏராளமான பொன்கட்டிகள் இருந்தது தெரியவந்தது. அன்பர் பெரியவரின் ஆசியால் வளம் பெற்றார் என்று கூறுவார்கள்.

இவ்வாறு பெரியவர்கள், சிவஞானிகள், மகான்கள் முதலியோர் வருங்கால உணர்வோடு நமக்கு நன்மைகள் பலவும் செய்துவருகின்றனர் என்பதற்குப் பல வரலாற்று நிகழ்ச்சிகளைக் கூறலாம்.

**கோயிலைக் கும்பிடு; குறைகள் தீர்ந்திடும் :**

நம் நாட்டில் சமய உணர்வுகளும் நம்பிக்கைகளும் மக்கள் வாழ்வோடு பின்னிப் பிணைந்து வந்துள்ளன. கோயில்கள் சமயநெறிகளின் தலைமைத்தானம். அவைகளைப் பேணிப் போற்றுதல் நம்கடமை. "கோயிலில்லா ஊரில் குடியிருக்க வேண்டா" என்பது நம் நாட்டுப் பழமொழி. "திருக்கோயில் இல்லாத ஊர் திருவில் ஊர்" என்பது

அப்பர் திருமொழி. இவ்வூரில் உள்ள கோயிலைச் சைவ மெய்யன்பர்கள் பலரும்கூடி நல்ல முறையில் திருப்பணிகள் செய்வித்து, கும்பாபிடேகம் நடத்துவதைப் பாராட்டுகிறோம்.

இங்குள்ள இறைவன் திருப்பெயர் கோடீசுவரர் என்பதாகும். கொட்டையூரில் எழுந்தருளியிருக்கும் இறைவன் திருப்பெயரும் கோடீசுவரர் என்பதாகும். கொட்டையூர்ப் பெருமான் திருமேனியில் கோடி சிவலிங்கங்கள் ஒரே பாணத்தில் உள்ளன. அவரை வணங்கினால் கோடி சிவலிங்கங்களை வழிபட்ட பலன் கிடைக்கும் என்பார்கள். அதுபோல இங்குள்ள பெருமானும் கோடீசுவரராக விளங்குகின்றார். சைவ மெய்யன்பர்கள் நாடோறும் சிவாலய தரிசனம் செய்வதை நியமமாகக்கொண்டு கோயிலுக்கு வந்து வழிபாடு செய்யத்தொடங்கினால் கோயில் விளக்கமாக இருக்கும்

பழமையும் பெருமையும் உடைய இவ்வூர்த் திருக்கோயிலை அன்பர்கள் பலரும் ஒற்றுமையோடும் ஊக்கத்தோடும் நன்முறையில் திருப்பணிகள் செய்திருக்கின்றார்கள் கோயில் திருப்பணிகளுக்கு உதவும் பொருள்கள் வீண்போவதில்லை.

" புல்லினால் கோடியாண்டு புதுமண்ணால் பத்துக்கோடி
சொல்லுமா ஞாலந்தன்னில் செங்கல்லால் நூறுகோடி
அல்லியங் கோதைமின்னே ஆலயம் மடங்கள் தம்மைக்
கல்லினால் புதுக்கினோர்கள் கயிலைவிட் டகலாரன்றே. "

என்ற பாடல் சிவாலயங்களில் திருப்பணிகள் செய்வோர் அடையும் பலன்களைக் கூறுகிறது.

அன்பர் திரு. இராமச்சந்திரம்பிள்ளை, திரு. குஞ்சிதபாதம்பிள்ளை, திரு. சம்பந்தம்பிள்ளை முதலியோர் முன்னின்று இந்நற்பணியை அன்பர்கள் பலரின் ஆதரவோடு செய்துள்ளனர். இத்திருக்கோயில் பணியைச் செய்து மகாகும்பாபிஷேகப் பணிகளில் ஈடுபட்டுள்ள அனைவர்க்கும் எல்லாநலன்களும் உண்டாகுமாறு செந்தமிழ்ச் சொக்கன் திருவருளைச் சிந்திக்கின்றோம்.

**வளர்க திருப்பணி !**

**வாழ்க நல்லன்பர்கள் !**

# திருஞானசம்பந்தரின் — — இயற்பெயர் யாது?

தருமையாதீனப்புலவர்

டாக்டர். திரு. சொ. சிங்காரவேலன் எம். ஏ, பிஎச். டி

1. நால்வர் இயற்பெயர்களுள் திருநாவுக்கரசர் திருப்பெயர் " மருள்நீக்கியார் " என்றும், சுந்தரர் திருப்பெயர் " நம்பியாரூரர் " என்றும், மாணிக்கவாசகர் திருப்பெயர் " திருவாதவூரர் " என்றும் சைவ உலகம் தெரிந்துள்ளது முதற்குரவராகிய திருஞானசம்பந்தர் இயற்பெயர் எதுவாயிருக்கக்கூடும் என்று இங்குச் சிந்திக்கலாம்.

1. 1. திருஞானசம்பந்தர் புராணத்தில் சேக்கிழார் குறிப்பாகவும், வெளிப்படையாகவும் பல்வேறு செய்திகளைக் கூறிச் செல்கின்றார். சான்றுகள் இல்லாத ஒரு சின்னஞ்சிறு செய்திகூடச் சேக்கிழார் திருப்பாட்டுக்களில் இல்லை என்பதும் தமிழறிஞர் நன்கு அறிந்ததே. ஆதலால், திருஞானசம்பந்தர் இயற்பெயர் எது என்ற ஆய்விற்கும் நாம் சேக்கிழார் திருப்பாட்டுக்களைக் கூர்ந்துநோக்குவது இன்றியமையாததாகின்றது

1. 2. முதற்கண் திருஞானசம்பந்தர் பிறந்தருளிய செய்தியைச் சேக்கிழார் எவ்வாறு குறிப்பிடுகின்றார் என்று நோக்கலாம்.

" தாவில் சராசரங்களெல்லாம்
சிவம்பெருக்கும் பிள்ளையார் திருவவதாரம் செய்தார் " (26)

என்பது சேக்கிழார் திருவாக்கு.

1. 3. திருவவதாரம் செய்த இடத்தில் இயற்பெயரைச் சேர்த்து உரைக்கும் வழக்கம் உடையவர் சேக்கிழார் என்பது திருநாவுக்கரசர் புராணத்தில், அவ்வருளாளரின் பிறப்பைக் குறிக்கும் இடம் கொண்டு உணரலாம்; அப்பகுதி பின்வருவது :

" மலரும் மருள்நீக்கியார் வந்து அவதாரம் செய்தார் " (18)

---

இக் கட்டுரையில் சேக்கிழார் திருப்பாட்டுகளைக் குறிக்கும் எண்கள், சைவசித்தாந்த மகாசமாசத் திருத்தொண்டர் புராணப் திப்பை (1950) ஒட்டியவை.

தடுத்தாட்கொண்ட புராணத்தில் சேக்கிழார் இவ்வழக்கினும் சிறிது வேறுபட்டுள்ளனர் என்பது பின்வரும் அப்புராணத் தொடரால் இனிது விளங்கும் :

" ஏதமில் கற்பின் வாழ்க்கை
மனை இசை ஞானியார்பால்
தீதகன்றுஉலகம் உய்யத்
திருவவதாரம் செய்தார் " (3)

" தம்பிரான் அருளினாலே
தவத்தினால் மிக்கோர் போற்றும்
நம்பியாரூரர் என்றே
நாமமும் சாத்தி " (4)

' மருள் நீக்கியார் ' என்பது அப் பரடிகளாரின் இயற்பெயர் என்று தோன்றுமாறு பாடிய சேக்கிழாரின் தொடரமைப்பை ஒத்து நோக்கும் போது, திருஞானசம்பந்தரது இயற்பெயரும் இவ்விடத்துச் சுட்டப் பட்டிருக்கக்கூடும் என்று கருதுவது தவறாகாது. ஆயின் அந்த இயற்பெயர் எது? ஆம்; " பிள்ளையார் " என்பதே திருஞானசம்பந்தரின் இயற்பெயராக இருக்கக் கூடும்.

1. 4. " பிள்ளை " " பிள்ளையார் " என்பன திருஞான சம்பந்தரைக் குறிக்கும் சொற்களாகப் பெருவழக்கில் உள்ளன.

" பிள்ளை பாதி புராணத்தில்—
தில்லைபாதி திருவாசகத்தில் "

என்பது பழமொழியாக உள்ளது. ' பட்டினத்துப்பிள்ளையார் ' என்று பட்டினத்தார்க்குப் பெயர் வழக்கப் பெறுவதும் ஒப்பிடத்தக்கது.

" மலரும் " என்ற அடைமொழி சேர்த்து ' மருள்நீக்கியார் " என்ற இயற்பெயரைச் சிறப்பித்தார் அங்கு; " தாவில் சராசரங்கள் எல்லாம் சிவம் பெருக்கும் " என்ற அடைமொழிகளைச் சேர்த்துப் " பிள்ளையார் " என்ற இயற்பெயரைச் சிறப்பித்தார் இங்கு என்று கருதலாம்.

2. இதன்பிறகு, " பெரும்புகலிப் **பிள்ளையார்** " (49) என்றும், " பின்சென்ற **பிள்ளையார்** தமைநோக்கி (57) என்றும், " **பிள்ளையார்** தமைக் கரையில்வைத்து " (59) என்றும், "நின்றருளும் **பிள்ளையார்**" (61) என்றும், "அழுகின்ற **பிள்ளையார்**" (66) என்றும் இந்த இயற் பெயர்களாற் கூறி, அம்மையும் அப்பனும் தோன்றி " எண்ணரிய சிவஞானத் தின்னமுதம் குழைத்தருளி " ஆட்கொள்ளப் பெற்றதும்

" ஆளுடைய பிள்ளையார் " (66) என்ற சிறப்புத் தொடராற் குறிக்கின்றார் சேக்கிழார்பெருமான். இதன்பிறகு " சிவனடியே சிந்திக்கும் திருப்பெருகு சிவஞானம் " முதலிய அனைத்தும்பெற்றுத் தவமுதல்வர் திருஞானசம்பந்தராகத் திகழ்ந்தார் என்று உணர்வு ததும்ப உரைக்கின்றார்.

2. 1 " ஆளுடைய பிள்ளையார் " என்ற அழகிய தொடரால், 109, 313, 334, 399, 453, 1021 ஆகிய பாடல்களில் திருஞானசம்பந்தர் புராணத்திலும், 181, 231, 234 ஆகிய பாடல்களில் திருநாவுக்கரசர் புராணத்திலும், 2 ஆம் பாடலில் நின்றசீர்நெடுமாறர் புராணத்திலும் திருஞானசம்பந்தரைச் சுட்டி மகிழ்வர் சேக்கிழார்.

2 2 பிள்ளையார் என்ற இயற்பெயரைச் சீர்காழி என்ற அவதாரத் தலத்துடன் இணைத்துக் கூறி மகிழும் இடங்கள் பல:

" பெரும்புகலிப் பிள்ளையார் " (49)

" வண்புகலிப் பிள்ளையார் " (245)

" சிரபுரத்துப் பிள்ளையார் " (261), (617), (70?)

" சண்பைவரும் பிள்ளையார் " (389)

" அருட்காழிப் பிள்ளையார் " (483)

" சண்பைவரு பிள்ளையார் " (திருநாவுக்கரசர்புராணம்-186)

" காழி ஞானப்பிள்ளை " (மேற்படி - 250)

இவ்விடங்களைத் தொகுத்துச் சுட்டும்போதும், கூர்ந்து நோக்கி உணரும்போதும் " பிள்ளையார் " என்பது இயற்பெயரே என்று கொள்ள இடம் உள்ளது. ஊர்ப்பெயரை இயற்பெயரோடு இணைத்துரைப்பது ஒரு பழைய தமிழ்மரபே என்பதும் இவ்விடத்து உணரத் தக்கது. அந்தமரபை நோக்கும்போதும், இக்கருத்து மேலும் உறுதிப்படுவதாகின்றது.

' இளையான்குடி மாறர் ", " காரைக்கால் அம்மையார் " ஆகிய நாயனார்கள் பெயரும் இவ்வாறே வழங்கப்பட்டமை காணலாம். சங்கப் புலவர்களின் பெயர்களில், ஊர்ப்பெயர் ஒட்டிய இயற்பெயர்கள் பலவற்றை நோக்கலாம். இம்மரபின் அடிப்புலத்தேயே இங்குக் காட்டப்பட்ட சேக்கிழார் திருவாக்குக்களைக் கொள்ளவேண்டும்.

3. பலஇடங்களில் இயற்பெயராகிய இப் " பிள்ளையார் " என்ற சொல்லுடன் தக்கசில அடைமொழிச்சொற்களைச் சேர்த்தும் ஆளுவர்

சேக்கிழார்பெருமான். புகழ், தவமாண்பு, குடிப்பெயர், ஞானவளம், மறையருளிய திறம், இளமை, அருள் ஒளி, தெய்வநிலை, புண்ணியப் பேறு ஆகிய நல்லியல்புகளை விதந்து ஓதுவனவாக இத்தொடர்கள் அமைந்துள்ளன. பொதுவாக இளமைகுறித்த பெயராக இச்சொல்லைக் கருதுவோமாயின் இவ்வடைமொழிகள் தருகின்ற பொருட் சிறப்பை விட, இயற்பெயராகக் கொண்டால் அன்றோ பொருட் சிறப்பு மேலும் மிகுகின்றது. பின்வரும் தொடர்கள் இவ்வகையில் ஒன்றுபடுத்திக் காணத்தக்க பொருள் நலப் பொதுளியவை;

| | |
|---|---|
| " பெருணர்விற் பொலிகின்ற பிள்ளையார் " | (72) |
| " ஆயபுகழ்ப் பிள்ளையார் " | (134) |
| " தவந்தழைப்ப வந்தருளிய பிள்ளையார் " | (152) |
| " பெருகிய ஞானம் பெற்ற பிள்ளையார் " | (468) |
| " கவுணியப் பிள்ளையார் " | (519, 560) |
| " ஈறில் சிவஞானப் பிள்ளையார் " | (553) |
| " அருமறைப் பிள்ளையார் " | (587, 609) |
| " பால் நறுங்குதலைச் செய்ய பவளவாய்ப் பிள்ளையார் | (802) |
| " தேசுடைப் பிள்ளையார் " | (818) |
| " திருவுடைப் பிள்ளையார் " | (846) |
| " போற்றுசீர்ப் பிள்ளையார் " | (856) |
| " புண்ணியப் பிள்ளையார் " | (862) |
| " இன்னருட் பிள்ளையார் " | (867) |
| " சீருடைப் பிள்ளையார் " | (868) |
| " ஒப்பில் புகழ்ப் பிள்ளையார் " | (878) |
| " ஞாலம் உய்ய வந்தருளும் பிள்ளையார் " | (895) |
| " செப்பரிய புகழ்ப் பிள்ளையார் " | (929) |
| " இம்பர் ஞாலம் உய்யவந்த பிள்ளையார் " | (993) |
| " பெருகொளி ஞானம் உண்ட பிள்ளையார் " | (1235) |

திருஞானசம்பந்தரைச் சேக்கிழார் பெருமான் "பிள்ளையார்" என்ற இயற்பெயராகக் குறித்துள்ள இடங்கள் 120; இவற்றுட் பெரும் பாலானவை திருஞானசம்பந்தர் புராணத்தன, நின்றசீர் நெடுமாற

நாயனார் புராணத்துள் ஓர் இடம் மட்டுமே, ஏனையவை திருநாவுக்கரசர் புராணத்தன. 'பிள்ளை' என்ற சொல்லாற் குறித்த இடங்களும் உண்டு; ஆனால் அவை மிகச்சில. (501, 598, 616, 745. திருநாவுக்கரசர் புராணம், 183,)

4. இங்குத் தொகுத்துக் காட்டப்பெற்றுள்ள இச்செய்திகளுக்கு மேலாக இன்னும் ஒரு சான்றாக, நம்பியாண்டார் நம்பிகள் பாடியுள்ள பதினோராம் திருமுறைப் பனுவல்கள் அனைத்தையும் பிள்ளையார் என்ற பெயரொடு தொடர்புபடுத்தியே அமைத்துள்ளமையைக் காட்டலாம். (காட்டு: ஆளுடையபிள்ளையார் கலம்பகம்.)

5. சேக்கிழார் பெருமான் குறித்துள்ள குறிப்புக்களைக் கூர்ந்து நோக்குங்கால், சைவ சமய முதற்குரவராகிய திருஞானசம்பந்தரது இயற்பெயர், "பிள்ளையார்" என்றே இருக்கக்கூடும் என்பது, இனிதுணரலாகின்றது. சைவ உலகம் இதனைத் தொடர்ந்து சிந்தித்து முடிவுகாண வேண்டும் என்பது இக்கட்டுரை ஆசிரியனின் வேண்டுகோள்.

---

## பார்வையாளர் குறிப்பு

திருக்கயிலாய பரம்பரைத் தருமையாதீனம்

### வேளூர் ஸ்ரீ வைத்தியநாதசுவாமி தேவஸ்தானம்

திருப்பராய்த்துறை ஸ்ரீ விவேகானந்த வித்யாவனக் குருகுல மாணவர்களும், ஆசிரியர்களும் 120 பேர் இன்று ஸ்ரீ வைத்தியநாத சுவாமி, தையல்நாயகி, ஸ்ரீ செல்வமுத்துக்குமாரசுவாமி தரிசனம் சிறப்பாகச் செய்தோம். இங்குள்ள ஸ்ரீமத் தம்பிரான் சுவாமிகளும், நிர்வாகஸ்தர்களும், பூரண கும்பத்துடன் எங்களை வரவேற்று இனிதே தரிசனம் செய்துவைத்தனர். பக்தி பூர்வமாக ஓதுவார் உதவியுடன் ஐக்கிய வணக்கமும் வழிபாடும் செய்தோம். பக்தி பூர்வமாக வரும் பக்தர்கள் கூட்டம் பெருக இத்திருக்கோயில் திருப்பணி செய்து வருவதாகுக. 'வாழ்க அடியார் கூட்டம், வளர்க பக்தர்கள் வழிபாடு' என்னும் கோட்பாட்டை நடைமுறைக்குக் கொண்டுவரும் ஆலயப்பணி ஓங்குவதாகுக. நண்பகல் நாங்கள் அனைவரும் ஈசுவரப்பிரசாதமாகத் திருவமுதும் அருந்தினோம். இங்குள்ள அன்பர்கள் விருந்தோம்பலையும் அன்போடு செய்தனர்.

(ஒ-ம்) நித்தியானந்த,
ஸ்ரீ ராமகிருஷ்ண தபோவனம்,
திருப்பராய்த்துறை.

5—8—79.

ஆவணிமூலத்திருநாளன்று

தருமையாதீனம் ஸ்ரீ சொக்கநாதப்பெருமான் சந்நிதியில்



ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானம் அவர்கள்
சென்னைப்பல்கலைக்கழகத் தத்துவத்துறைப் பேருரையாளர்
டாக்டர். திரு. வை. இரத்தினசபாபதி எம். ஏ., பிஎச். டி. அவர்களுக்கு
பொன்னாடை போர்த்தி 'சித்தாந்தக் கலைஞர்' பட்டம் வழங்கி
ஆசி அருளல்.

1—9—79

உ

குருபாதம்

# தீபாவளி வருகிறது!

சோதியாய்ச் சுடராகிச் சூழ்ஒளிய விளக்காகி
ஆதியம் பரமனருள் அகந்தேடி வருகிறது !
எங்கும் இருளகல இன்பஒளி சூழ்ந்திடவே
மங்கலமாம் திருநாளும் மாட்சியுடன் வருகிறது !
புத்தாடை இடைஇலங்கப் புத்துணர்வு மனங்கொள்ளச்
சத்தான பலகாரச் சந்திப்பும் வருகிறது!
சித்தம் மகிழ்ந்தாடிச் சிரிக்கின்ற குழந்தையைப்போல்
மத்தாப்பு ஒளிமின்னி மனத்தில் நிறைகிறது !
எண்ணெய் முழுக்காடும் இன்பத் திருநாளில்
ஏற்றம் பிறக்கிறது; இனியஒளி பாய்கிறது!
நன்மை மலர்கிறது; நாடு செழிக்கிறது !
இன்மை எனுஞ்சொல்லே இல்லாமல் போகிறது!
அம்மை திருவருளும் ஐயனது ஆற்றல்களும்
நம்மை அடைவதற்கு நடையிட்டு வருகிறது !
தீபம் எரிகிறது ! திருவிழாச் சிறக்கிறது !
தெய்வத் திருக்காட்சி திக்கெட்டும் காண்கிறது !
அன்பு வாழ்கிறது ! அறியாமை தொலைகிறது !
பொன்போன்ற திருநாளும் பொலிந்து வாழ்கிறது !
வானம் சுரக்கிறது ! வயல்வெளிகள் பூக்கிறது !
தானம் வளர்கிறது ! தாய்நாடு வெல்கிறது !.

— இரா. செல்வக்கணபதி.

# திருப்பறியலூர், திருச்செம்பொன்பள்ளி
# — தலச் சிறப்புக்கள் —

தருமையாதீனத் தமிழ்ப்புலவர்,

**வித்துவான். திரு. வி. சா. குருசாமி தேசிகர்** ஏம். எ

சோழ வளநாட்டில் தஞ்சை மாவட்டத்தில் மாயூரம் வட்டத்தில் மாயூரத்திலிருந்து பொறையாறு செல்லும் வழியில் இவ்விருதலங்களும் உள்ளன. செம்பொன் பள்ளி செம்பொனூர் கோயில் எனவும், பறியலூர் பரசலூர் எனவும் வழங்கப்படுகின்றன.

மாயூரம் - தரங்கம்பாடி இருப்புப் பாதையில் விளங்கும் செம்பொனூர்கோயில் புகைவண்டி நிலயத்தில் இறங்கினுல் இவ்விரு தலங்களையும் அடையலாம். மாயூரத்திலிருந்து இத்தலங்களை அடையப் பேருந்து வசதிகள் நிரம்ப உள்ளன. செம்பொனூர் கோயில் - பேருந்து வழியில் உள்ளது. பறியலூர் செம்பொனூர் கோயிலிலிருந்து தென்மேற்கே 2 கி. மீ தூரத்தில் உள்ளது.

## 1. திருப்பறியலூர்

இத்தலம் தருமையாதீனத்துக்குச் சொந்தமான திருக்கோயில். அட்டவீரட்டத் தலங்களில் இறைவன் வீரபத்திரரைஏவித் தக்கனைச் சம்ஹரித்ததலம். திருஞானசம்பந்தர் அருளியதேவாரத் திருப்பதிகம் ஒன்றைப் பெற்றுத்திகழ்வது.

**வீரட்டானம் :** இறைவன் நிகழ்த்திய மறக்கருணைச் செயல்கள் எட்டு எனக் கூறுவர். இறைவனது பெருவீரத்தைக் குறிக்கும் இச்செயல்கள் நிகழ்ந்த தலங்கள் வீரட்டானம் எனப்படும். இத்தலங்கள் எட்டு என்பர். இத்தலங்களையும் இவற்றில் நிகழ்ந்த வீரச்செயல்களையும் குறிக்கும் பாடல் :-

பூமன் சிரம்கண்டி; அந்தகன் கோவல்; புரம் அதிகை;
மாமன் பறியல்; சலந்தரன் விற்குடி; மா வழுவூர்;
காமன் குறுக்கை; இயமன் கடவூர்; இக்காசினியில்
தேமன்னு கொன்றையும் திங்களும் சூடிதன் சேவகமே.

இப்பாடல் வீரட்டானங்களைக் குறிக்கிறது. பிரமனைக் கண்டியூரிலும், அந்தகனைக் கோவலூரிலும், முப்புராதிகளை அதிகையிலும், தக்கனைத் திருப்பறியலூரிலும், சலந்தரனை விற்குடியிலும், யானையை வழுவூரிலும், காமனைக் குறுக்கையிலும், இயமனைக் கடவூரிலும் இறைவன் சம்ஹரித்தார் என்று இப்பாடல் கூறுகிறது. அப்பர் சுவாமிகள் இவ் வீரட்டங்களை,

காவிரியின் கரைக்கண்டி வீரட்டானம்
கடவூர் வீரட்டானம் காமருசீர் அதிகை
மேவிய வீரட்டானம் வழுவை வீரட்டம்
வியன்பறியல் வீரட்டம் விடையூர்திக் கிடமாம்
கோவல்நகர் வீரட்டம் குறுக்கை வீரட்டம்
கோத்திட்டை குடிவீரட் டான மிவைகூறி
நாவில்நவின் றுரைப்பார்க்கு நணுகச்சென்ருல்
நமன்தமரும் சிவன்தமரென்று அகல்வர் நன்கே.

இவ்வெட்டு வீரட்டானங்களுள் தருமை யாதீனத்திற்குச் சொந்தமான வீரட்டானங்கள் மூன்று. அவை 1. பறியல், 2. குறுக்கை, 3. கடவூர் ஆகும்.

**தலப்பெயர்கள் :** இத்தலத்தின் பெயர்களாக வழங்கப்படுவன தக்ஷபுரம், பறியலூர் என்பனவாகும். பிரமனின் புதல்வனுன தக்ஷன் யாகம் செய்த தலமாதலால் தக்ஷபுரம் எனப்படுகிறது. தாரகன் என்ற அசுரனுல் தேவர்கட்கு ஏற்பட்ட பயத்தை நீக்கிய (பறித்த) தலமாதலாலும் தக்ஷயாகத்திற்கு வந்த தேவர்களின் தீமையைப் பறித்த தலமாதலாலும் இத்தலம் பறியல் எனப்படுகிறது எனத் தல புராணம் கூறும்.

**கோயிலமைப்பு :** சிறியகிராமம். ஊரின் கீழ்பால் கோயில் உள்ளது. மேற்கு நோக்கிய கோயில். சுவாமி மேற்கு நோக்கியும் அம்பிகை தெற்கு நோக்கியும் உள்ளனர். கோயில் வாயிலில் தீர்த்தம் உள்ளது. இரண்டு பிராகாரங்கள். இரண்டாம் பிராகாரவாயிலைக் கடந்து கோயிலை வலம்வரும்போது முதலில் விநாயகர் முருகன் மகாலட்சுமி ஆகியோரைத் தரிசிக்கலாம். வடக்குப்பிராகாரத்தில் விசுவநாதர் கோயில் உள்ளது. மேற்கே தலவிநாயகர், நால்வர் ஆகியோரைத் தரிசிக்கலாம். கர்ப்பக்கிருகக் கோஷ்டங்களில் வடக்கே துர்க்கை பிர்மா, கிழக்கே லிங்கோற்பவர், தெற்கே தக்ஷிணுமூர்த்தி விநாயகர் ஆகியோரைத் தரிசிக்கலாம். தக்கன் ஆட்டுத்தலையோடு சிவபெருமானைப் பூசிக்கும் சிற்பம் உள்ளது.

மகாமண்டபத்தில் அம்பிகை தெற்கு நோக்கி விளங்கும் சந்நிதி உள்ளது. ஸ்நபன மண்டபத்தில் தக்ஷசம்ஹார வீரபத்திரர் விளங்குகிருர். பீடத்தின் அடியில் தக்கன் தலை சாய்ந்து கிடக்கும் உருவம் உள்ளது.

சுவாமி சந்நிதியின் வாயிலில் துவாரபாலகர் உள்ளனர். வீரட்டேசுரர் பெரிய திருவுருவோடு காட்சிதருகிருர்.

கருத்தன் கடவுள் கனலேந்தி யாடும்
நிருத்தன் சடைமேல் நிரம்பா மதியன்
திருத்தம் உடையார் திருப்பறிய லூரில்
விருத்தன் எனத்தகும் வீரட்டத் தானே.

என்ற தேவாரத் திருப்பாடலை ஓதி வழிபடலாம்.

**மூர்த்திகள் :** இறைவன் திருப்பெயர் அருள்மிகு வீரட்டேசுரர். தக்ஷபுரீசுவரர் எனவும் வழங்கப்படுகிருர். இறைவி திருப்பெயர் அருள்மிகு இளங்கொம்பனையாள். அருள்மிகு வீரபத்திரர் திருவுருவம் தரிசிக்கத்தக்கது.

**தலமரம் :** வில்வம். **தீர்த்தம் :** உத்தர வேதிதீர்த்தம்.

## புராண வரலாறு

**புற்கலன் வரலாறு :** மகளிரோடு நீர்விளையாட்டயர்ந்த புற்கலன் ஆங்குவந்த சவுனக முனிவரை வணங்காது அவமதித்த காரணத்தால் அம்முனிவரின் சாபம்பெற்று வேடுவனுய் அலைந்து திரிந்து முடிவில் இத்தலத்தை அடைந்தான். இங்குவந்த ஏழு முனிவர்களின் குடை திருவடி முதலியவற்றைப் பறித்தான். அவனுக்கு முனிவர் அளித்தசாபம் நீங்கும் காலம் வந்தது அத்திரி முனிவரின் வாட்டத்தைக் கண்டு வேடுவனுகிய புற்கலன் இரங்கி அவரது பொருள்களைத் திருப்பியளித்தான். ஏனைய முனிவர் பொருள்களையும் அளித்தான். முனிவர்களின் அருள்வலியால் நல்லறிவு பெற்ருன். அம்முனிவர்களிடம் உபதேசம் பெற்ருன் ; இங்குத்தங்கித் தவம் பெருக்கி வால்மீகி முனிவராகி முத்தி எய்தினுன்.

**தக்ஷயாகம் :** உமாதேவியைத் தன் மகளாகப்பெற்றுச் சிவபெருமானுக்கு மணம் செய்து கொடுத்து அப்பெருமானை மருமகனுகப் பெற்ருன் தக்கன். பெருமான் தக்கன் அறியாதபடி உமையை அழைத்துச்சென்றதாலும், கயிலைசென்றபோது நந்திதேவரால்தடுத்து நிறுத்தப்பெற்றதாலும் சிவபெருமானைப் புறக்கணித்து அவியை விட்டுணுவுக்குத்தந்து ஒரு பெருவேள்வி செய்ய எண்ணினுன்

தக்கன். நாரதமுனிவரைக்கலந்து ஆலோசித்து இத்தலத்தைத் தேர்ந்து யாகசாலை அமைத்து வேள்விசெய்தான். தேவர்கள் அனை வரும் வந்தனர். வியாழன் வேள்விக்கிரியைகள்செய்தார். அழையா மலே உமையம்மை யாகத்திற்கு வந்தாள். தக்கன்கூறிய சிவநிந்தை யுரையைக் கேட்டு வருந்தினாள். அவமானப்பட்டாள். இவ்வேள்வி யும் வேள்விசெய்யும் தக்கனும் அழியுமாறு சபித்துக் கயிலைசென்றார். பெருமான் வீரபத்திரக் கடவுளை ஏவி வேள்வியை அழித்து வருமாறு பணித்தார். வீரபத்திரர் விட்டுணுவைத் தண்டாலடித்தும், பிரம னைக்குட்டியும், கலைமகளை மூக்கரிந்தும், சந்திரனைத் தேய்த்தும், சூரியனைப் பற்களை உடைத்தும், யமன் தலையை வெட்டியும், அக்னியை நாவறுத்தும் தண்டித்தார். இந்திரன் குயிலுருவாய்ப் பறந்து ஓடினான். சிவபெருமானைப் புறக்கணித்துப் பழித்த தக்கன் தலையை வீரபத்திரர் வெட்டி வேள்வித்தீயில் இட்டார். திருமால், பிரமர் பணிந்து பிழைபொறுக்க வேண்டினர் பெருமான் காட்சி தந்தார்; தக்கன் உடலில் ஆட்டுத்தலையைப்பொருத்தி எழச்செய்தார். ஏனைய தேவர்களும் எழுந்தனர் தேவர்கள் வேண்டியபடி பெருமான் இலிங்கத் திருமேனியோடு இத்தலத்தில் எழுந்தருளி அருள் பாலித்து வருகின்றார்.

சாட எடுத்தது தக்கன் தன் வேள்வியில் சந்திரனை
வீட எடுத்தது காலனை நாரணன் நான்முகனும்
தேட எடுத்தது தில்லையுட் சிற்றம்பலத்து நட்டம்
ஆட எடுத்திட்ட பாதமன்றோ நம்மை ஆட்கொண்டதே.

என்று தக்கன் வேள்வியைத் தகர்த்த இறைவனது வீரச்செயலை அப்பரடிகள் அருளியுள்ளார்.

**இலக்கியம்:** திருஞானசம்பந்தர் அருளிய தேவாரத் திருப் பதிகம் ஒன்றைப் பெற்றுள்ளது. திருநாவுக்கரசு சுவாமிகள் அருளிய ஆறுந்திருமுறையில் ஏழாந் திருப்பதிகத்தின் ஆறுவது பாடலும் எழுபத்தோராம் திருப்பதிகத்தின் இரண்டாம் திருப்பாடலும் இத் தலத்தைக் குறிப்பிடுகின்றன.

சேக்கிழார் ஞானசம்பந்தர் புராணத்தில் 'பறியலூர் மேவும் தோடுலாமலர் இதழியும் தும்பையும் அடம்பும் காடுகொண்ட செஞ் சடைமுடிக்கடவுளர் கருது நீடுவீரட்டம் பணிந்தனர் நிறைமறை வேந்தர்' என்று அருளிச்செய்கிறார்.

கந்தபுராணத்தில் 'தண்ணியல் மஞ்ஞையாடும் தண்டுறைப் பறியலூர்' எனவும், திருவிளையாடலில் 'மேழகச்சென்னி தன்னை மங்கல மாமற்கீந்த மருகனூர் இருக்கை' எனவும், திருப்பெருந்துறைப்

புராணத்தில் 'வரமிகு மாதுலன் வேள்வி மடித்தஇடப்' எனவும் குறிப்பிடப்படுகின்றன.

இத்தலத்தின் பெருமையைக் கூறும் திருப்பறியலூர்ப் புராணத்தை, திருவாவடுதுறை ஆதீனத்தில் மகாசந்நிதான மாகவிளங்கிய ஸ்ரீலஸ்ரீ பின்வேலப்பதேசிக சுவாமிகள் அருளிச் செய்துள்ளார்கள்.

**கல்வெட்டுக்கள்:** இக்கோயிலில் அமைந்த கல்வெட்டுக்கள் மூன்ருகும். அவை 1925-ல் அரசியல் பழமைப் பாதுகாவல்துறையினரால் படியெடுக்கப்பெற்றுள்ளன.

சுந்தரபாண்டியனின் ஆட்சிக்காலத்தே 5ஆவது ஆண்டில் இத்தலம் கல்வெட்டில் குறிக்கப்பெறுவது 'ஜெயங்கொண்ட சோழவள நாட்டு வீழை நாட்டு இராஜநாராயண சதுர்வேதி மங்கலமான பறியலூர்' என்று. இறைவர் 'தட்சேசுவரம் உடையவர்' 'திருவீரட்டான முடையார், என வழங்கப்பெறுகிருர். கிருஷ்ணப்ப தேவ மகாராயர் என்பவரால் சில சிற்றூர்கள் வரி தண்டல் செய்யப் பெற்றுச் சிவ விஷ்ணு கோயிலுக்கு அளிக்கப்பெற்றது. யாத்ரீகர்களுக்கு உணவு வசதி செய்யப்பெற்றது. பரராஜ பயங்கர நல்லூரில் 30 வேலி நிலம் இறையிலியாக அளிக்கப்பெற்றது. ஏழுலகம் உடைய சதுர்வேதி மங்கலத்து ஒரு அக்ரகாரம் அமைக்க நிலம் ஒதுக்கப் பட்டது.

தெய்வப் புனற்கெடில வீரட்டமும்
செழுந்தண் பிடவூரும் சென்று நின்று
பவ்வந் திரியும் பருப்ப தம்மும்
பறியலூர் வீரட்டம் பாவ நாசம்
மவ்வந் திரையு மணி முத்தமும்
மறைக்காடும் வாய்மூர் வலஞ்சு ழிய்யும்
கவ்வை வரிவண்டு பண்ணே பாடுங்
கழிப்பாலை தம்முடைய காப்புக்களே. — நாவுக்கரசர்.

## வீரபத்திரர் துதி

பலமெவையும் தருநயன மூன்றும் காட்டிப்
பகரும்அருள் வடிவாகிக் கரங்கள் எட்டில்
வலமொளிவாள் கதையினெடு வயங்கு சூலம்
மழுப்படைமற்(று) இடப்பாலில் கபாலம் பட்டம்
இலகுமணி யொடுமுசலம் இணைய தாங்கி
எய்தும்அடி யவர்இடுக்கண் எவையும் வீட்டி
உலகில்உயர் பறியல்நக ரதனுள் வாழும்
ஒருவீர பத்திரனை உளத்தில் வைப்பாம்.

— தலபுராணம்.

## 2. திருச்செம்பொன்பள்ளி

இத்தலம் செம்பொனார்கோயில் என வழங்கப்படுகிறது. சோழ நாட்டுக் காவிரித்தென்கரைத் தலங்களில் 42 வது தலம். திருஞான சம்பந்தர் அருளியதிருப்பதிகம் ஒன்றையும், திருநாவுக்கரசர் அருளிய திருப்பதிகங்கள் இரண்டையும் இத்தலம்பெற்றுள்ளது.

சோழமன்னனால் திருப்பணி செய்யப்பெற்ற கோயில் என்ற பொருளுடைய செம்பியன்பள்ளி என்ற பெயர் மருவி செம்பொன் பள்ளி என வழங்கியதாகலாம். செம்பியன் - சோழன். சோழமன்னர் களில் பலர் இத்திருக்கோயில் திருப்பணியைச் செய்துள்ளனர். கோயில்பெயரே ஊர்ப்பெயராக வழங்கப்படுகிறது. செம்பொனால் வேயப்பெற்ற கோயில் என்றும் கூறலாம். செம்பொனார்கோயிலின் தெற்கு வடக்குப்பகுதிகளில் பழைய திருச்சம்பள்ளி, புதிய திருச்சம் பள்ளி என இருகிராமங்கள் உள்ளன.

**கோயிலமைப்பு:** மாயூரம் பொறையாறு பேருந்துப் பெரு வழியில் செம்பொனார்கோயில் பேருந்துநிலையத்துக்கு அருகில் கோயில் உள்ளது. கிழக்குநோக்கிய கோயில். சுவாமி கிழக்குநோக்கியும், அம்பாள் மேற்கு நோக்கியும் உள்ளனர்.

சாலையில் கோயிலின் வாயிலில் வளைவு ஒன்றும் தலவரலாற்றுச் சுருக்கம் எழுதிய பலகை ஒன்றும் உள்ளன. கோயிலின் வாயிலின் வலதுபக்கம் தீர்த்தம் உள்ளது. நந்தி பலி பீடங்கள் கோயில்வாயிலில் உள்ளன. இராஜகோபுரம் இல்லை. பஞ்சமூர்த்திகள் அமைந்த கட்டைக் கோபுரவாயிலைக் கடந்தவுடன், கோயில் பிராகாரத்தை அடைகிறோம். ஒரு பிராகாரம் மட்டுமே உள்ளது. கன்னிமூலையில் விநாயகர், அடுத்து மேற்குப் பிராகாரத்தில் நால்வர் முருகன் கஜலட்சுமி ஜேஷ்டாதேவி உள்ளனர். கர்ப்பக்கிருகக் கோஷ்டங் களில் தெற்கே தக்ஷிணாமூர்த்தி, மேற்கே அர்த்தநாரீசுரர், வடக்கே பிர்மா துர்க்கை ஆகியோர் உள்ளனர். வடக்குப் பிராகாரத்தில் சண்டேசர் கோயில் உள்ளது. சுவாமிசந்நிதியில் மகாமண்டபத்தில் திருப்பதிகக் கல்வெட்டு பதித்து வைக்கப்பெற்றுள்ளது. சுவாமி சந்நிதியில் துவாரபாலகரை அடுத்து விநாயகர் சூரியலிங்கம் சுந்தர லிங்கம் சுப்பிரமணியர் உள்ளனர். ஸ்நபன மண்டபத்தில் பஞ்ச மூர்த்திகள் உள்ளனர். அர்த்தமண்டப வாயிலில் சண்டி முண்டி காவலர்களாக உள்ளனர். சுவாமி சந்நிதி மிக்க சிறப்போடு விளங்குகிறது.

ஊனினுள் உயிரை வாட்டி உணர்வினர்க்கு எளியராகி
வானினுள் வான வர்க்கும் அறியலா காத வஞ்சர்
நானெனில் தானே யென்னும் ஞானத்தார் பத்தர் நெஞ்சுள்
தேனும் இன் னமுதும் ஆனார் திருச்செம்பொன் பள்ளியாரே.

என்ற தேவாரத்தை ஓதி வழிபட்டு அம்பாள் சந்நிதியை அடைய லாம். அம்பாள் இரண்டு திருக்கரங்களோடு விளங்குகின்றாள். அருள்மிகு மருவார்குழலி என்பது அம்மையின் பெயர். தலத் திருப் பதிகத்திலும் இப்பெயர் கூறப்படுகிறது.

**மூர்த்திகள்:** இறைவன் திருப்பெயர் அருள்மிகு திருச்செம் பொன்பள்ளியார் என்பதாகும். சுவர்ணபுரீசுவரர் எனவழங்கப் படுகிறார். இறைவி திருப்பெயர் அருள்மிகு மருவார்குழலியம்மை. வடமொழியில் சுகந்த குந்தளாம்பிகை என வழங்கப்படுகிறது. பிக்ஷாடனர் திருவுருவம் தரிசிக்கத் தக்கது. தலமரம் - வன்னி. தீர்த்தம் - சூரியதீர்த்தம்

**புராண வரலாறு** : இந்திரன் விருத்திராசுரனைக் கொல்வதன் பொருட்டுச் செம்பொன் பள்ளி இறைவரை வழிபட்டான். அதனால் இத்தலம் இந்திரபுரி எனப்பட்டது. முருகப்பெருமான் தாரகாசுரனை வதைத்தற்பொருட்டுப் பூசித்தமையால் ஸ்கந்தபுரி எனப்பட்டது. அகத்தியர் வழிபட்டுப் புருஷார்த்தங்களைப் பெற்றுள்ளார். பிரமன் பூசித்துப் படைப்புத் தொழில் கைவரப் பெற்றுள்ளான். இரதி பூசித்துக் காமனை அடைந்தாள். நாககன்னியர் வழிபட்டு நல்லகண வரை அடைந்துள்ளனர். வசிட்டர், திக்குப்பாலகர், காவிரி முதலிய வர்களும் வழிபட்டுப் பேறு பெற்றுள்ளனர். வீரபத்திரர் தக்கன் தலையைத் தடிதற்குத் திருவவதாரம் செய்ததலம் இதுவாகும். இத் தலத்தில் காவிரியில் இடும் எலும்புகள் பூமரங்களாய் இறைவனுக்குச் சாத்தப் பயன்படும்.

**கல்வெட்டுக்கள் :** இத்தலத்தைப்பற்றியனவாக 6 கல்வெட்டுக் கள் உள்ளன. அவை 1925 ல் படியெடுக்கப்பட்டுள்ளன. இராஜாதி ராஜன் ஆட்சி ஐந்தாமாண்டில் திருவாலங்காடுடையார்க்கு வின நகரான நித்தவிநோத சதுர்வேதிமங்கலத்து விளநாட்டுச்சபையார் நிலம்விட்ட செய்தியை அறிவிப்பது. அதேயாண்டில் இராஜாதிராஜ வளநாட்டு திருஇந்தளூர் நாட்டு மணற்குடியான உத்தமசோழ சதுர்வேதி மங்கலத்துச் சபையார், செயங்கொண்டசோழ மண்ட லத்து ஆக்கூர்நாட்டு ஆக்கூரான இராஜேந்திரசிம்ம சதுர்வேதி மங்கலத்து மேல்பாதி அபிமான நல்லூரில் அரசற்கு, நன்றாக வழிபட வருகின்றவர்களுக்கு உணவுக்காக நிலம் வழங்கப்பெற்றுள்ளது.

மூன்றுங்குலோத்துங்கன் காலத்து இராசேந்திரசிம்ம நாடாகிய ஆக்கூரில் தூண்டாவிளக்கெரிக்க நாற்பது பொற்காசுக்கு நிலம்வாங்கி உழவரிடம் ஒப்படைக்கப்பட்டது. 6ம் ஆண்டில் அரசியலில் சிறந்த செய்தியொன்று அறிவிக்கப்படுகிறது. சிங்களவர்களைத் துணைக்கொண்டு பாண்டியர்கள் படையெடுத்து வந்த படையேறு கலகத்தில் செம்பொன்னூர் கோயிலிலுள்ள தேவரடியாரும் கோயில்நியாயத்தாருமாகச் சேர்ந்து எல்லாத் திருவுருவங்களையும் திருவிடைக்கழி இளைய பிள்ளையார் கோயிலில் கொண்டுபோய்வைத்துப் பாதுகாத்தனர். மேலும் அவ்வாண்டில் பெரிய புயற்காற்று அடித்திருக்கின்றது. அதனால் தப்பாத வேதியன் திருவாசல் வடக்குச்சுவரும் தேரடி இரண்டும் வீழ்ந்தன. இன்னார் என்று அறியப்படாத இராசகேசரி வர்மன் ஆறும்ஆண்டில் பூசைக்கும் பணிக்குமாகத் தலைச்செங்காட்டுச் சபையார் ஒருவனிடமிருந்து நிலம்வாங்கி அரசற்கு நன்றாக அளித்தனர். இதில் இராசசுந்தரன்வீதி என்ற ஒரு தெருப் பெயர் குறிப்பிடப்படுகின்றது. சரபோஜிராசா கலி 4821-ல் செம்பொன்னாதர் கோயிலுக்குத் தலைச்செங்காடுசபையார் கிராமங்களின் நன்மைக்காக ஆண்டுக்கு ஒருமுறை வரியோடுகூட தறிகளின் உற்பத்தியளவையொட்டி ஆயம் வசூலித்துக் கொள்ளவும் காவேரிப்பட்டினம் அய்யாவையனும் தாண்டவராய முதலியாரும் வசூலிப்பாளராயிருக்கவும் ஆணை தரப்பட்டுள்ளது.

## க்ஷேத்திரக்கோவைப் பிள்ளைத்தமிழ்

தேசுமிகு தேவர்களில் ஒருவன்நீ இந்த்ராதி
தேவரெல் லாம்கூடியே
சிவபரம் பிரமமிவ னேஎன்று பூசித்த
செம்பொற் பதாம்புயத்தோன்
வாசமல ரோனைமுன் குட்டியே சிறைவைத்து
மண்டுமண் டம்படைத்தோன்
மாலும்அய னும்தேடி அடிமுடிகள் காணாத
வளர்பரஞ் சோதிமைந்தன்
தாசரடி யார்தாசன் எனஇருந் திடுமுனைத்
தன்பெருமை அறியாமலே
தனைஒத்த பேரெனப் பிள்ளைவிளை யாட்டிணைத்
தருமிளம் பருவத்தினால்
ஆசையோ டழைத்தனன் எங்கள்கும ரேசனுடன்
அம்புலீ யாடவாவே
அழகுசெம் பொன்பள்ளி ஆறுன னத்துடன்
அம்புலீ யாடவாவே.

— சிதம்பர முனிவர்.

# நால்வர் தமிழின் நலன்

சித்தாந்தப்புலவர்மணி.

திரு. ந. ரா. முருகவேள் M. A., M. O. L.

**இராமலிங்க அடிகளார் :**

இராமலிங்க அடிகளார் சைவ சமய ஆசிரியர்களாகிய நால்வர் பெருமக்களிடத்தில், மிகவும் ஈடுபாடுகொண்டு விளங்கியவர் என்பது அனைவரும் அறிந்ததே. நால்வர் பெருமக்கள் அருளிய தேவார திருவாசகத் திருப்பாடல்களில், நமது இராமலிங்கவள்ளலார் தனிமிகச் சிறந்த பற்றும் பக்தியும் கொண்டிருந்தார் என்பதையும், அன்பர்கள் அனைவரும் அறிவர். வள்ளலார் ஒவ்வொரு வாரமும் வெள்ளிக்கிழமை தோறும் திருவொற்றியூர்சென்று அங்குள்ள வடிவுடை அம்மையைத் தரிசித்துவரும் வழக்கம் உடையவராக இருந்தார்.

அங்ஙனம் ஒருமுறை தங்கசாலைவழியாக அடிகளார் திருவொற்றி யூருக்குச் சென்றுகொண்டிருந்தார். அன்பர்கள் சிலரும் அவரோடு உடன்சென்றனர். வழிபாட்டுநேரத்திற்குள் திருவொற்றியூர்க்குச் சென்று சேர்தல்வேண்டும் என்னும் கருத்தில், விரைந்து நடந்து சென்றுகொண்டிருந்த அடிகளார், திடும் என ஒரு இடத்தில் அப்படியே நின்றுவிட்டார் அந்நிலையில் அவர் தம்மை மறந்து மனம் ஒன்றிநின்று உணர்ச்சிவயப்பட்டவராய்ச் செயலற்றிருந்தார். அவர்தம் கண்களில் கண்ணீர் அரும்பிற்று. அதுகண்ட அன்பர்கள் காரணம் தெரியாது கலங்கித் திகைத்துநின்றனர். சிலநிமிடங்கள் கழித்தே அடிகளார் உணர்வுவரப்பெற்றார்.

அதன்பின்னர் அவர் திருவொற்றியூருக்குத் தொடர்ந்து நடக்க லாயினர். அன்பர்கள், அடிகளார் ஏன் இடைவழியில் தம்மை மறந்து நின்றார்? ஏன் உணர்ச்சிவயப்பட்டுச் செயலற்று இருந்தார்? என அறியும் ஆவலுடையவராக இருந்தனர். தாம் வழி இடையில் தம்மை மறந்து நின்றதற்குக் காரணம் இன்னது என்பதனை அடிகளார் பின்னர் ஒருசமயம் அன்பர்களுக்குக் குறிப்பாகப் புலப் படுத்தினர்.

தங்கசாலைத்தெருவழியாக இராமலிங்க அடிகளார் நடந்துசென்று கொண்டிருந்தபொழுது அங்கே ஓர் இல்லத்தில் அன்பர் ஒருவர் தேவாரப் பாடல் ஒன்றை இனிய இசையுடன் நிகழ்த்திக்கொண் டிருந்தார். அத்தெய்வ கீதத்தைக்கேட்ட அளவில் கேட்டதன்

விளைவாகவே அடிகளார் தம்மையும் தாம் மறந்தார்; அடிகளாரின் மனம் கசிந்துருகிச் செயலற்றுவிட, அவர்பரவசப்பட்டு நிற்கநேர்ந்தது என்னும் செய்தியை அன்பர்கள் பின்னர்த் தெரிந்துகொண்டனர்.

இராமலிங்க அடிகளார், தமது திருவருட்பாவில் 'திருவருள் முறையீடு' என்னும்தலைப்பில், ஒருபாடலில் தாமே இந்நிகழ்ச்சியினை ஒருவாறு பின்னர்க் குறிப்பிட்டருளியிருக்கின்றார்.

சேல்வருங் கண்ணி இடத்தோய்! நின் சீர்த்தியைச் சேர்த்தி அந்த
நால்வரும் செய்தமிழ் கேட்டுப், புறத்தில் நடக்கச் சற்றே
கால்வரும் ஆயினும், இன்புரு ஆகிக் கனிமனம், அப்
பால்வருமோ? அதன் பாற் பெண்களை விட்டுப் பார்க்கினுமே!

## நால்வர் தமிழ்நலன் :

சைவசமய ஆசிரியர்களாகிய அப்பர் சம்பந்தர் சுந்தரர் மணிவாசகர் என்னும் நால்வர் பெருமக்களிடத்திலும், அவர்கள் திருவாய் மலர்ந்தருளிச்செய்த தேவார திருவாசகச் செந்தமிழ்த் தெய்விகப் பாடல்களிலும், இராமலிங்க வள்ளலார்க்கு இருந்த எல்லையற்ற ஈடுபாடு இப்பாடலால் இனிது புலனாதலை யாவரும் காணலாம்.

1. நால்வர் பெருமக்களின் நலம் சிறந்த தெய்விகப் பெருமை இணையது என்பார், '**அந்த நால்வரும்**' என்றார். 'அந்த' என்பது 'நெஞ்சறிசுட்டு' எனவும், 'உலகறிசுட்டு' எனவும் வழங்கப்பெறும். நால்வர்களின் பெருமையை இராமலிங்கரின் நெஞ்சமே நன்கினிது அளந்து ஆய்ந்து அறியவல்லதன்றி, நம்மால் ஒரு சிறிதும் அறியவாராது ஆதலின், 'அந்த' என்னும் சொல், அவர் '**நெஞ்சறிசுட்டு**' ஆயிற்று. நால்வர்களின் பெருமை நானிலம் அனைத்தும் பண்டே அறிந்து வியந்து பரவி வழுத்தப்படுவதாகலின் '**உலகறிசுட்டு**' எனினும் ஆம்.

2. இனிமையின் நீர்மையெல்லாம் ஒருங்கியைந்து இயன்று விளங்குவதே தாய்மொழி; ஆயினும் அது தானும் கூட, மேலும் மிகமிக இனிமை நலம்பெற்று, நால்வர்களின் திருவாய் மலர்களினின்று தேனும் பாலும் கன்னலும் அமிழ்தமுமாய் வெளிப்போந்தது ஆதலின், தேவார திருவாசகத் தீஞ்சுவைத் தெய்விகப் பாடல்களை '**நால்வரும் செய்தமிழ்**' என்று, நயமிகப் புகழ்ந்து பாராட்டினார்! 'செய்தமிழ்' என்றது 'அருளிச்செய்த தமிழ்' என்றபடி. தமிழ்மொழி தன்னியல்பிலேயே சிறந்துயர்ந்து திகழ்வதெனினும், நால்வர்கள் அதனைமேலும் மிகப்பெரிதும் சிறப்புறச் செய்தருளினர் எனினுமாம்.

3. அப்பாடல்களைக் கேட்பவர்கள் அவற்றின் சொற்பொருட் சுவை இசை நலங்களில் ஈடுபட்டுவிடுவார் ஆகலின், அவ்விடம்

பெயர்ந்து நடப்பதற்குக் கால் வராது என்பார் 'கால் வருமாயினும்' என்ருர் இங்குக் "கால் வருமாயினும்'' என்னும் கவின்மிகு தொடர், "கால் வருமோ? என்னும் வினவையும், அதற்குரிய வராது என்னும் விடையையும் உள்ளடக்கிநின்று, ஒரோவழிவருமாயினும்'' என்னும் பொருளிற் போந்தது.

4. ஒரோவழி கால்கள் வருமாயினும், அத்தேவார திருவாசகத் தெய்விகப் பாடல்களின் இசை நலத்தின் இனிமையில் ஒன்றி, கசிந்து கனிந்து கரைந்து உருகிக் களித்து நிற்கும் பண்பட்ட மன மானது, அதனைக் கேட்பதிலேயே ஊன்றித் திளைத்துச் செயலற்று நிற்கும். சமய வாழ்க்கையில் அருளனுபவ உணர்வின் தலையான நிலை இது. இத்தகைய அரிய பெரிய இணையற்ற நிலை எய்திய மனத்தினை "இன்ப உரு ஆகிக் கனிமனம்'' என்று சிறந்தெடுத்துக் குறிப்பிடுகின்ருர்.

5. தவநிலையில் மிகவும் அழுந்தித் தம்மை மறந்து சமாதிவயப் பட்டு நிற்கும் சிறந்த முனிவர்களையும், அழுக்காறு முதலிய காரணங் களால் தேவேந்திரன், திலோத்தமை மேனகை ஊர்வசி அரம்பை முதலிய தேவமாதர்களை அனுப்பி மயக்குமாறு செய்து, அவர்களைத் தவநெறியினின்று பிரித்துக் கெடுத்துப் பிறழச் செய்வான் எனப் புராணங்கள் புகலும். அத்தகைய தேவமாதர்களாலும்கூட, நால்வர் தமிழ்கேட்டு உருகிக்கனிந்து பண்பட்ட நல்லமனத்தினை, மயக்குதல் ஒரு சிறிதும் இயலாது.

"இத்தன்மை அரம்பையர்கள் எவ்விதமும் செயல்புரிய,
அத்தனுர் திருவடிக்கீழ் நினைவகலா அன்புருகும்
மெய்த்தன்மை உணர்வுடைய, விழுத்தவத்து மேலோர்தாம்,
சித்தநிலை திரியாது செய்பணியின் தலைநின்ருர்''

எனப் பெரியபுராணத்தில் திருநாவுக்கரசர் வரலாற்றில் வரும் நிகழ்ச் சியும், இங்கு நாம் நினைந்துணர்தற்குரியது. இத்தகைய சிறந்த அனுபவ உண்மைச் செய்தியினையே "இன்புரு ஆகிக் கனிமனம் அப்பால் வருமோ, அதன்பாற் பெண்களை விட்டுப் பார்க்ினுமே'' என இராமலிங்க அடிகளார் எழிலுறச் சிறந்தெடுத்துப் போற்றி விளக்குகின்ருர்.

## முடிவுரை :

இதனுல் இராமலிங்க வள்ளலார்க்கு, நால்வர்கள்மாட்டும், நால் வர்கள் அருளிச்செய்த தமிழ்நலன்மாட்டும் இருந்த எல்லையற்ற அன்பும், ஆர்வமும் பற்றும் பக்தியும் புலனுகும். புலன் ஆகவே, நாமும் நால்வர்களின் தமிழ் நலனிற் பெரிதும் அன்பும் ஆர்வமும் பக்தியும் கொண்டு போற்றி ஓதியுய்யத் தலைப்படுவோமாக!

# உணர்ச்சிக் காவியம் பெரியபுராணம்

புலவர். திரு. மு. வைத்தியநாதன்

**முன்னுரை :**

தெய்வத் தன்மைவாய்ந்த சிவனடியார்களின் சீலம் விளக்கும் அருள் நூல் திருத்தொண்டர்புராணம். காப்பிய வடிவிற்கு மிகச்சிறந்த எடுத்துக்காட்டாகத் திகழ்வதும் அந்நூலே. 'பெரியபுராணம் ஓர் உணர்ச்சி வெளிப்படுத்தும் காப்பியம்' என வரைந்து காட்டுவதே இவ்வெழுத்தின் நோக்கமாகும்.

**சேக்கிழாரடிகள் :**

செந்தமிழ்ச் சோழநாட்டில் சைவசமயம் நலிவு அடைந்த காலத்தில்- பிறசமய வரவு ஏற்பட்டு அவை மேனியாய் இருந்த காலத்தில்- வழிவழிச் சைவனுகிய சோழமன்னன் தன் சமயநூல் விடுத்து வேற்றுச்சமய நூல்களை விரும்பிக் கற்க முற்பட்டகாலத்தில், சோழநாட்டுச் சைவநெறி மக்கள் தங்கள் சமயத்தை வளர்க்கத் தலைவர் ஒருவர் தேவை என்று ஆவலுடன் எதிர்பார்த்திருந்த கால எல்லையில், தொண்டைநாடு தந்த செல்வமாகக் கிடைத்தவர்தான் தெய்வச் சேக்கிழார் அடிகள். இவ்வடிகள், வாழ்க்கைத்தத்துவத்தின் அடிப்படையை நன்கு அறிந்தவர். நாட்டுமக்கள் திருத்தமான செம்மைநெறியில் செல்லவேண்டும் என்ற ஆவலால், கலைநிலையமாம் பெரியபுராணம் இயற்றியுள்ளார்.

**பக்திச்சுவை :**

காவியம் பாட அவர் எடுத்துக்கொண்ட பொருள், மிகவும் சிறந்த தாகும். பழம்பெரும் நூலாகிய சித்திரச்சிலம்பு அவலச் சுவையை விளக்குவது; அணி மணிமேகலை பெருமிதச் சுவையை நயம்பட எடுத்துரைப்பது; தேன்மலர்ச் சோலையாம் சிந்தாமணி இன்பச் சுவையினைப் பாங்குற நவில்வது இவ்வாறு காப்பியங்கள் ஒவ்வொரு சுவையினை மையமாக்கொண்டு விளங்கக் காண்கின்றோம். ஆனுல், சேக்கிழாரடிகள் இலக்கியச்சுவை ஒன்பதிற்கும் புறத்ததாகிய பக்திச் சுவையை மையமாக வைத்துத் தமிழன்னைக்குப் புத்தாரம் அணிவித் திருக்கிருர். பெரியபுராணம் பக்திச்சுவை நிரம்பிய காவியம் என்பதை முதன்முதலில் ஆராய்ந்து வெளியிட்டவர், மாபெரும்புலவர் திரி சிரபுரம் மீனுட்சிசுந்தரம்பிள்ளை அவர்கள். இவர் சேக்கிழாரைப்

பாராட்டும்போது, "பக்திச்சுவை நனி சொட்டச் சொட்டப் பாடிய கவிவலவ" என்று வியந்துரைப்பார். பெரியபுராணத்துள் பிறசுவை இல்லையா? எனில் உண்டு. ஆனால், பக்திச்சுவை நனி சொட்டு கிறது என்று கூறியிருப்பதைச் சிந்திக்கவேண்டும்

**உணர்ச்சி இலக்கியம் :**

மனிதவுள்ளத்தின் விழுமிய படைப்புதான் கவிதையாகும். மனிதன் படைத்திடும் சீரிய படைப்புகளில் கவிதை முடிமணி போன்றது. எப்படி மனித இதயம் அழிவில்லாததோ அதுபோல, கவிதையும் இறவாதநிலை உடையது. கவிதைகளை ஆராய்வதால் உணர்வுத் தெளிவு ஏற்படும்; அதனால். வாழ்வுத் தெளிவும் ஏற்படும். மனிதவுள்ளத்தில் எழும் கிளர்ச்சிகளை, மற்றொருவன் உள்ளத்தில் எழுமாறு செய்வதையே கவிதை என்பர். அப்படி எழும் கிளர்ச்சி தான் இரண்டு வகைப்படும். தனிக் கருத்துகளாக உருப்பெறுவதும் உண்டு. உணர்வு வெளிப்பாடாக அமைதலும் உண்டு. கருத்துகளை மற்றவர் அறிய விளக்கும் நூல், அறிவுநூல் எனப்படும். தனக்கு ஏற்படும் உணர்ச்சிகளை மற்றவர்கள் உள்ளத்திலும் படித்தவுடன் உண்டாகுமாறு செய்வதே இலக்கியமாகும்.

**உணர்ச்சிப் பாடல்கள் :**

கவிஞன் எந்த ஒருகாட்சியையும் முதலில் நேராகக் கண்டு, அதை அப்படியே உள்ளத்தில் தேக்கி வைத்துக் கொள்வான். பின்னர் அதை நினைந்து நினைந்து அனுபவிப்பான். தன் அனுபவ மேலீட்டைப் பிறரும் அனுபவிக்கும் வண்ணம், அதற்குக் கவிதை வடிவம் கொடுப்பான். இது ஒருவகை. இல்லாத ஒன்றை- நடக்காத ஒன்றை- பார்க்காத ஒன்றைக் கற்பனை செய்து வெளியிடுவதும் உண்டு. இது பிறிதொருவகை. சேக்கிழார் எந்த அடியாரையும் நேரில் பார்க்கவில்லை; மனத்தில் வைத்திருக்கவுமில்லை; பின்னர் எழுத எத்தனிக்கவும் இல்லை இல்லாத ஒன்றை- நடக்காத ஒன்றைக் கற்பனையாகப் பாடவும் இல்லை. நேராகப் பார்க்காததை, ஆனால் தன் காலத்திற்கு முன்னே நடந்ததைக் கல்வெட்டு, செப் பேடு, மூல இலக்கியம் போன்றவைகளை ஆராய்ந்து, அப்போது அறிந்தவைகளை, உண்மையாகப் புனைந்துரையில்லாமல், தான் உணர்ந்தவாறே உணர்ச்சிப் பாடல்களாக வெளியிட்டுள்ளார்.

**அருளுணர்ச்சி :**

சேக்கிழார் எந்த ஒரு காட்சியையும் முதலில் ஆழ்ந்து அனுப வித்தவர். அந்த அனுபவம் எந்த வகையிலும் குறையாதவாறு

உணர்வு அலைகளாக வெளியிட்டவர். உணர்வு எழுப்பும் அனுபவங்கள் சக்தி வாய்ந்ததாக இருத்தல்வேண்டும். அப்பொழுதுதான் பிறர் உணர்வுகளைப் புரிந்துகொள்ளமுடியும். அப்புதுமை உணர்வால் தான் கண்ணப்பருடைய அன்பையும், சிறுத்தொண்டருடைய சீரிய செயலையும், இயற்பகையாரின் அருஞ்செயலையும், திருநீலகண்டரின் கடுவிரதத்தையும் விளங்கிக் கொள்ளமுடியும். சேக்கிழார் தன் அனுபவத்தைச் சொற்களால் குழைத்துப் பிறர் உணர்வைத் தொடும் வகையில் கூறிடும் அருட்கவிஞர்.

'வானம் இருண்டது' என்பதை விளக்கவேண்டுமானால், அதற்குப் பல வழிகள் உண்டு. உவமைகளால் விளக்கலாம். கரிய மைக்குழம்பு பெருகியது போல் வானம் இருண்டு வந்தது என்று கூறலாம். ஆனால், சேக்கிழாரடிகள், இச்செய்தியையும் பக்தியுணர்வு தோன்ற விளக்கியுள்ளார். எம்பெருமானின் திருவடி அடையப் பற்றுக்கோடு ஐந்து எழுத்து மந்திரமாகும். அதை அறியார்மனம் அறியாமையால் இருண்டிருக்கும். இதையே உவமையாக்கி வானம் இருண்டதை விளக்குகின்றார். "அஞ்சு எழுத்தும் உணரா அறிவினர் நெஞ்சம் என்ன இருண்டது நீலவான்" என்பது அவருடைய பாடல்.

காவிரியாறு வளமூட்டிய விதத்தை விளக்க எத்தனையோ வழிகள் இருப்பினும் சேக்கிழாரடிகள், தம் பக்தியுணர்வால், அங்கும் "அண்ணல் பாகத்தை ஆளுடையநாயகி உள்நெகிழ் கருணையின் ஒழுக்கம் போன்றது" என்று பாடியுள்ளமை அறியலாம்.

**நாவுக்கரசர் வருங்காட்சி :**

கற்பனைத்திறமும் பக்தியுணர்வும் நிரம்ப உடையராகிய சேக்கிழாரடிகள், ஒவ்வொரு காட்சியையும் முதலில் மனத்திரையில் ஓட விடுகின்றார். அதை அப்படியே நம் உணர்வினுக்கு வழங்குகின்றார். ஒவ்வொரு பாடலும் நம்மை உணர்வுப்பிழம்பு ஆக்குகிறது. சமணப் பாழியிலிருந்து விடுதலையடைந்து, பல தண்டனைகளுக்குப் பின் திருநாவுக்கரசர்பெருமான் திருவதிகைக்கு வருகின்றார். 'தூய்மையின் அடையாளமாம் வெண்ணீறு பூசிய பொன்மேனி; கழுத்திலே தாழ்வடம்; எம்பெருமானின் திருவடிகளையே நினைத்திருக்கும் உள்ளம்; நைந்து நைந்து உருகி வெள்ளம்போல் அன்புநீர் பொழியும் கண்; திருப்பதிகங்களை இடையறுது நவின்றிடும் செய்ய வாய்; இத்தகைய 'அன்பே உருவாய்' திருவதிகைநகரினுள்ளே புகுந்தனர்" என்று பாடியுள்ளார் சேக்கிழாரடிகள். அவர் கண்டகாட்சி, அப்படியே நமக்குக் காட்சியாகிறது கவிதை வடிவத்தில்.

" தூயவெண் ணீறு துதைந்தபொன் மேனியும் தாழ்வடமும்
நாயகன் சேவடி தைவருஞ் சிந்தையும் நைந்துருகிப்
பாய்வது போல்அன்பு நீர்பொழி கண்ணும் பதிகச்செஞ்சொல்
மேயசெவ் வாயும் உடையார் புகுந்தனர் வீதியுள்ளே "

எனவரும் பாடல் நம்மையும் உணர்வால் ஒன்றுபடுத்துகிறது..

இந்நிலையில் நாவுக்கரசர் வருதலைக்கண்ட திருவதிகை நன்மக்கள் "இந்தக் கருணைகண்டால், மிண்டாய செய்கை அமண்கையர் தீங்கு விளைவிக்கச் செற்றம், உண்டாயின வண்ணம் எவ்வண்ணம்? என்று உரைத்தார்கள்" என்பதாகப்பாடும் சேக்கிழாரடிகள், தான் உணர்ந்ததைக் காண்பாரையும் உணரவைத்து, அவர்களையும் கேட்க வைத்துள்ள திறம் நினைந்து மகிழ்தற்குரியது. இதுதான் உணர்வு வெளிப்பாடு.

**உறையூரும் புலைப்பாடியும்:**

ஒரு காவியம் படைக்கும் புலவன், ஒருகாட்சியை வருணிக்கு முன், அக்காட்சியை அனுபவிக்கவேண்டும். பின்னர் அக்காட்சியைக் கண்டவாறே - உள்ளது உள்ளவாறே கூறுதல்வேண்டும். அதற்கு அவனுடைய சொல்லாட்சி துணைபுரிதல் வேண்டும். அப்பொழுது தான் அவனுடைய கூர்த்த அறிவும் அனுபவமும் தெளிவாகப் புலப்படும். நாம் காணும் காட்சியைக் கவிஞனும் காண்பான். ஆனால், அவன் காட்சிக்கும் நம் காட்சிக்கும் வேறுபாடு இருக்கும். ஒருகாட்சியில் நாம் காணாததை கவிஞன் காண்பான். சில கவிஞர்கள் செல்வர் வாழுமிடத்தை மிக வியந்துபாடுவர். எளியமக்கள் வாழுமிடத்தை விளக்கப்புகும்போது இடருறுவர். பெரிய கோயில்களையும், மாடங்களையும், அரண்மனைகளையும் கண்ட அவர்கள்கண்களுக்குச் சேரியைக் கண்டால், அங்கு இருப்பவை எவையுமே அவர்கள் கண்களில் தோன்றுவதில்லை. ஆனால். சேக்கிழாரடிகள் புகழ்ச்சோழர் வாழ்ந்த அறந்துஞ்சும் உறையூரைப் பாடுகின்றார். அவரே நந்தனாருடைய ஆதனூர்ப் புலைப்பாடியையும் பாடுகின்றார். இப்படிப் பாடுபவர் சோழநாட்டு முதல்அமைச்சர் என்பதில்தான் சிறப்பு அமைந்திருக்கிறது. "கார் ஏறும் கோபுரங்கள், கதிர் ஏறும் மலர்ச்சோலை, தேர் ஏறும் மணிவீதி, திசையேறும் வசையிலணி பார் ஏறும் புகழ் உறந்தைப் பதியின் வளம் பகர்வரிதால்" என்று சோழனின் தலைநகரைப் புகழும் சேக்கிழாரடிகள், நம்மை ஆதனூர் புலைச்சேரிக்கு அழைத்துச் செல்கின்றார். தொலைவிலிருந்து புலைப்பாடியைக் காட்டும் அவர், நம்மை ஊரினுள் அழைத்துச் சென்று காணச் செய்யும் காட்சி, அதனினும் சிறந்ததாக உள்ளது.

**சிற்றூர்ச் சூழ்நிலை :**

பழைய கூரை வீடுகள்; புற்கள் வேயப்பட்டவை; அவைகளின் மீது சுரைக் கொடிகள் பற்றிப் படர்ந்துள்ளன. இப்படிக் காணப்படு கிறது புலைப்பாடி. உள்ளே, ஒரு வீட்டின்முன் உள்ள மறைவிடத்தில் நாய் ஒன்று குட்டிகளை ஈன்றுள்ளது. குட்டிகள் பிறந்து சில நாட்கள் ஆனவை; அங்குவந்த புலைப்பாடி கருஞ்சிறுர்கள், இளங்குட்டிகளைத் தூக்கிக்கொண்டு ஓடுகின்றனர். அவர்களின் இடுப்பில் உள்ள இருப்பு மணிகள் ஒலிக்கின்றன. அப்பொழுது, ஈன்றணிமையுடைய தாய் நாய் குரைக்கிறது. அக்குரைப்பொலி வெளியில் கேட்கவில்லை. காரணம்; சிறுவர்களின் இடுப்பில் உள்ள இருப்பு மணியின் ஓசை, நாயின் குரைப்பு ஓசையினை அடக்கி விடுகிறது. "வலியாரிடம் எளியார் அடங்கவேண்டியதுதானே" என் செய்வது?

அங்கே ஒரு மருதமரம். அதில் கிழிந்ததோலால் ஆன தொட்டில் ஒன்று தொங்குகிறது. அதுதான் சேரிவாழ் குழந்தைகட்கு மரகதத் தொட்டில். அதில் அயர்ந்து கண்ணுறங்குகிறது சேரிக்குழந்தை. அருகில் ஒரு கோழி தன் குஞ்சுகளுடன் இரைதேடி, ஒதுங்கி உலாவு கிறது. இவ்வாறுதான் ஆதனூர்ப் புலைச்சேரியில் தான் உணர்ந்து கண்டவைகளை, நம் உணர்விலும் பதித்துவிடுகிறுர் அருட்கவிஞர். சிற்றூர் சீர்திருத்தம்பற்றிப் பெரிதாகப் பேசும் இக்கால அரசியல் விற்பன்னர்களும் அறியாத செய்தியினைச் சோழப் பேரரசின் தலைமை யமைச்சர், இதனை, எத்தனை உள்ளுணர்வுடன் பாடியுள்ளார் என்ற உண்மையினை உணர்வது நலமன்றோ!

**உணர்ச்சியின் உச்சநிலை :**

கவிஞர் உணர்ச்சியினுடைய உச்சநிலைக்கு நம்மை அழைத்துச் செல்வதுண்டு. ஒருவன் உணர்ச்சியின் உச்சநிலையில் இருக்கும் போது தன்னைத்தானே பாராட்டிக்கொள்வான். இது உலக இயற்கை. இராமகாதையில்கூட ஒருகாட்சி உணர்ச்சிமயமாகக் காட்டப்படும். பதினன்கு ஆண்டுகள் பூழிவெங்கானத்து வாழ்ந்தபின் - இராவண வதம் செய்தபின் இராமன் திரும்பி வருகின்றுன் என்பதை அறிந்த பரதன், தன்னிலையில் தாழ்ந்தாரை வணங்கியதோடு அமையாமல் 'தன்னையே தான் தொழுது' கொண்டானும். இதுபோல், சேக்கிழாரடி களும் பல காட்சிகளை உணர்ச்சியின் உச்சநிலையாகப் படைத்துக் காட்டுகின்றுர்.

திண்ணன் குடுமித்தேவரின் வலக்கண்ணில் வழிந்த இரத் தத்தைக் காண்கின்றுன். அரிய மருந்தாகத் தன் வலக்கண்ணை அம்பால் பெயர்த்து, அப்பனின் வலக்கண்ணில் அப்புகின்றுன்.

மழையென வந்த குருதி நின்று விடுகிறது. அப்பொழுது அளவற்ற மகிழ்ச்சியால் அவன் செய்திடும் செயல்கள் உணர்ச்சியின் உச்சநிலை யினதாகும். இறைவன் கண்ணிலிருந்து வழிந்த குருதி அவனுக்கு வருத்தம் தந்தது. நின்றுவிட்ட குருதி அவனுக்கு மகிழ்வைத்தந்தது. அம்மகிழ்ச்சியால், நிலத்திலிருந்து அந்தரத்தில் தாவிப் பாய்ந்தார். மலைபோல் வளர்ந்துள்ள தம் தோள்களைத் தட்டி மகிழ்ந்தார். ஆனந் தக்கூத்தும் ஆடினார். தான் செய்த செயல் அவருக்கு மகிழ்ச்சியைத் தந்தது. ''நான் செய்த இந்த மதி நன்று நன்று' என்று தன்னையே தான் பாராட்டிக் கொண்டார். ஒருமித்த மகிழ்ச்சியால் உன்மத்தர் போல் விளங்கினார். இது சேக்கிழார் அடிகள் விளக்கும் உணர்ச்சி யின் உச்ச நிலையில் ஒரு காட்சி இதோ பாடல்.

'' நின்ற செங்குருதி கண்டார்; நிலத்தினின் றேறப் பாய்ந்தார் ;
குன்றென வளர்ந்த தோள்கள் கொட்டினார்; கூத்தும் ஆடி
நன்றுநான் செய்த இந்த மதிஎன நகையும் தோன்ற
ஒன்றிய களிப்பினாலே உன்மத்தர் போல மிக்கார்.''

**ஒன்றிய உணர்வுநிலை :**

உணர்வுகள் ஒன்றுபட்டுவிட்டால் எந்தவேறுபாடும் தோன்று வதில்லை. இணைந்த ஒருமனநிலை ஏற்பட்டுவிடும். இதை நன்கு அறிந்த கவிஞர், தம் காவியத்திலும் காட்டி மகிழ்வது உண்டு. உடுப்பூர் காட்டில், காளத்தி மலையில் தனித்து இருக்கும் குடுமித் தேவரைத் திண்ணன் காண்கின்றான். அப்படியே அன்புருவமாக ஆகிவிடுகின்றான். இறைவனைப்பார்த்து, வேடர்குலத்தில் தோன்றி யவர்போல, கரடியும் வேங்கையும் சிங்கமும் திரியும் இக்காட்டில், துணைவர் யாரும் இன்றித் தனித்து இருக்கலாமோ? இது அடாது என்று நைகின்றார். இப்படியேங்குவது குடுமித்தேவர்மீது திண்ணன் வைத்த உணர்வு ஒன்றிய அன்பின் நிலையாகும். தான் ஒரு வேடன் என்பதையும் மறந்து, இறைவனை ஒரு தோழன்போல் நினைத்துக் கேட்பது. அவனுடைய வேறுபாடு அற்ற நிலையைக் காட்டுகிறது. இக்காட்சியை நம் மனக்கண்ணிற்குக் கொண்டுவருபவர் சேக்கிழா ரடிகள்.

'' வெம்மறக் குலத்து வந்த வேட்டுவச் சாதி யார்போல்
கைம்மலை கரடி வேங்கை அரிதிரி கானம் தன்னில்
உம்முடன் துணையாய் உள்ளார் ஒருவரும் இன்றிக் கெட்டேன்
இம்மலைத் தனியே நீரிங் கிருப்பதே ! என்று நைந்தார்.''

என்பது அவர்தம் திருப்பாட்டு.

### குறிப்பால் உணர்த்துவது :

மற்றவர்களால் உணர முடியாதவைகளை நுட்பமாக உணர்ந்து, அவைகளை வெளிப்படையாக மட்டுமல்லாமல், குறிப்பாகவும் உணர்த்தும் திறம் கவிஞரின் இயல்பு. சேக்கிழாரடிகள் சுந்தரர் தங்கிய திருவாரூரின் சிறப்பினைப் பாடும்போது, ஆரூர் வீதிகளில் எல்லாம் திருப்பதிகங்களைக் கிளிகள் பாடுகின்றனவாம்; அதைப் பூவை என்னும் மைனக்கள் கேட்டு மகிழ்கின்றனவாம். இங்கு நாம் சிந்திக்க வேண்டுவது, கிளிகள் திருப்பதிகங்கள் பாடவேண்டுமானல், ஆரூரில் வாழும் மக்கள் திருப்பதிகங்கள் பாடுபவர்களாக இருக்கவேண்டும். மக்கள் பாடுவதைக் கேட்டுத்தானே, கிளிகள் திருப்பிப் பாடமுடியும். இதுதான் கவிஞர் திறம். பாடல் :

வள்ளலார் திருவாரூர் மருங் கெலாம்
தெள்ளும் ஓசைத் திருப்பதிகங்கள் பைங்
கிள்ளை பாடுவ கேட்பன பூவைகள்.

### சொல்லாட்சி :

கவிஞரின் சொல்லாட்சி புதுப்பொருளையும் புத்துணர்வையும் தருவது இயற்கை. காழிப்பிள்ளையார் மாடமதுரைக்கு வந்தார். ஆலவாய் அழகனைக் கண்குளிரக் கண்டு மகிழ்ந்தார். பின்னர் திருவீதியில் வருகின்றார். அங்கே ஒரு அம்மையார் நிலத்தில் வணங்கிய நிலையில் இருக்கிறார். அவரைக்கண்ட காழிஞானக் கொழுந்து, யார் இவர் ? என்ன, அங்கு நின்ற குலச்சிறையார் இவர் அரசியார் மங்கையர்க்கரசி என்றார். பெற்றதாயினைக் கண்ட மகவுபோல் மனங்குளிர்ந்து, அரசியார் தோள்களைக் கையால் தொட்டுத் தூக்கிவிட, அரசியார் தாய்மையால் நெகிழ்ந்துபோனர். அப்போது அவர், காழிச் செல்வத்தைப் பார்த்து. "தாங்கள் இங்கு எழுந்தருளியது யானும் என் பதியும் செய்த புண்ணியம்" என்கின்றார். இவர் சைவராகையால், இவர் செய்த புண்ணியம் சம்பந்தர் வரவிற்குக் காரணமாகலாம். அவர்பதியாம் பாண்டியன் சமணன். அவன் எப்படிக் காரணமாகமுடியும். என்றாலும், விட்டுக்கொடுக்காது கூறினர் என்றும் கொள்ளலாம். அல்லது "யானும் என் பதியாகிய மாடமதுரையும் செய்த புண்ணியத்தால் எழுந்தருளியுள்ளீர்கள்" என்று கூறியதாகவும் கொள்ளலாம்.

### முடிவுரை :

"கவிதையில் உணர்ச்சி வெளிப்படுத்துவதே அன்றி விளக்கப் படுவது அன்று" (In poetry the feeling is exhibited and not describced — C. T. W ) என்னும் அறிஞருரையை மையமாக வைத்துப் பெரியபுராணத்தை ஆராய்ந்தபோது தோன்றிய பலசெய்திகளில், சிலவற்றுக்கு எழுத்து வடிவம் தந்துள்ளேன்.

# சிவத்ரோஹம்

பிரவசனரத்நம், வியாகரணசிரோமணி, இந்திவிசாரத்,

திரு. P. S. கிருஷ்ணமூர்த்தி சாஸ்திரிகள்

" ஸர்வேஷாமபி பாபாநாம் பிராயச்சித்தம் ச்ருதௌ ஸ்ம்ருதௌ
நிர்திஷ்டம் ஹி புராணஞை: முனிபிச்ச மஹத்தரை:।
சிவத்ரோ ஹஸ்ய ச ஏகஸ்ய பிராயச்சித்தம் முநீச்வரை:।
மஹத்தரைர் ந நிர்திஷ்டம் சாஸ்த்ரே வேதேऽபிவாக்வசித்॥ "

(ஸ்காந்தம் - உபதேசகாண்டம் - 49 ஆவது அத்தியாயம்.)

"எல்லாப் பாவங்களுக்கும் வேதங்களிலும் ஸ்மிருதிகளிலும் பரிகாரம் சொல்லப்பட்டிருப்பதாகச் சிறந்த முனிவர்களால் கூறப்பட்டிருக்கிறது. ஆனுல் சிவத்ரோகத்துக்குப் பிராயச்சித்தம் கூறப்படவில்லை என்று ஆன்ருேர்கள் கூறுகிருர்கள்."

பிறருக்குத் தீங்கிழைப்பது துரோகமெனப்படும். சொல்லாலும் செயலாலும் பிறருக்குத் தீங்கிழைப்பதுமாத்திரம் துரோகமன்று. மனத்தால் தீங்குசெய்யலாம் என்று எண்ணிஞலே அதுவும் துரோகம் தான் என்று மகாபாரதம் கூறுகின்றது. "மறந்தும் பிறன்கேடு சூழற்க" என்பது திருவள்ளுவர் வாக்கு. அவ்வாறு இருக்க உலகைப் படைத்தும் காத்தும் தன்னிடம் இலயமாக்கிக்கொண்டுள்ள பரமேசுவரனுக்குத் துரோகம் செய்யலாமா? அச்செயல் மிகப் பெரிய பாதகம் என்று ஸ்காந்தம் கூறுகிறது.

பரமேசுவரன், ஈசுவரி, விநாயகர், முருகன், குரு, சிவபக்தர்கள் என்னும் அறுவர்க்குப்புரியும் துரோகங்கள் பெரும் பாபச்செயலாகும். சிவத்துரோகங்கள் என்ன என்ன என்று ஒவ்வொன்ருக ஸ்காந்தம் கூறுகிறது சிவனுடைய தனம், தான்யம், அபிஷேகத்திற்கும் தீபத்திற்கும் பயன்படவேண்டிய எண்ணெய், அவனது ஆடைகள், ஆபரணங்கள், அவனது ஆலயம், நிலம், திருக்கோயிலில் உள்ள மரங்கள், நந்தவனத்தில் உள்ள பூக்கள் இவைகளையெல்லாம் நாம் பயன்படுத்திக்கொண்டால் அது சிவத்துரோகமாகும் என்று ஒவ்வொன்றையும் குறிப்பிட்டுக்காட்டுகிறது ஸ்காந்தம். அதுமட்டுமல்ல. இப்பாவச்செயல்களை ஒருவர்செய்யுங்கால் அதைப்பார்த்துக்கொண்டு

நமக்கேன்? என்று அதைக்கவனியாததுபோல் இருந்தாலும் பாவம் தான் என்று கூறப்படுகிறது

"சிவன் சொத்துக் குலநாசம்" என்று நம் பெரியோர்கள் சொல்லக்கேட்டிருக்கிறோம். திருக்கோயில்களிலுள்ள பூக்களை எடுத்து வந்து வீட்டிலுள்ள பூஜாமூர்த்திகளுக்கு அர்ச்சிப்பதும் குற்றம் என்று சான்றோர்கள் அவைகளை எடுத்துவரமாட்டார்கள்.

விபூதி, உருத்திராக்ஷம், சிவாகமங்கள், சிவபுராணங்கள் இவைகளைக் குறைகூறுதலும் சிவத்துரோகந்தான். இத்தீய செயல்கள் இம்மையிலும் மறுமையிலும் துன்பத்தைவிளைவிக்கும் என்று அழுத்தமாகக் கூறப்பட்டிருக்கிறது. இதற்கு எடுத்துக்காட்டாகச் சில வரலாறுகளையும் அது கூறுகிறது.

கீலகன் என்ற வங்கநாட்டரசன் சிறந்த சிவபக்தன். அவன் சிவராத்திரியன்று கோகர்ண க்ஷேத்திரத்தில் சிவதரிசனம் செய்ய வேண்டும் என்று அங்குச் சென்றான். திரும்பிவரப் பல மாதங்கள் ஆயின. அவனது நான்கு குமாரர்களுள் வீரஜித் என்பவன் திருக்கோயிலிலிருந்து இருநூறு செங்கற்களை எடுத்துவரச்செய்து சொந்த உபயோகத்துக்குப் பயன்படுத்திக்கொண்டான். கற்களை எடுத்த வேலையாட்களைச் சிவபக்தர்கள் சிலர் இது தகாதசெயல் என்று கூறித் தடுத்தனர். ஆலயம் அரசனுக்குரியது; அவன் அக்கற்களை எடுத்துக்கொண்டால் தவறு ஒன்றுமில்லை என்று அவனது பணியாட்கள் கூறி அவைகளை எடுத்துச்சென்றனர்.

அவ்வரசனின் மற்றொரு புதல்வன் கோரஜித் என்பவன், திருக்கோயிலுக்குச் சொந்தமான ஒரு பெரிய மாமரத்தை வெட்டி வீழ்த்தி யாகசாலை ஒன்றை நிர்மாணித்தான். யாகசாலைக்குத்தானே அம்மரம் பயன்படுகிறது; அதில் என்ன குறை என்று அவனது வாதம். ஆனால் அதுவும் துரோகந்தான். அதை அத்திருக்கோயிலுக்கே பயன்படுத்தியிருந்தால் தோஷமாகாது.

சூரஜித் எனும் மற்றொருபுதல்வன் திருக்கோயில் நந்தவனத்திலிருந்து பூக்களைக்கொண்டுவரச்செய்து அவைகளைத் தான் அணிவதற்கும் தனது மனைவி அணிவதற்கும் பயன்படுத்திக்கொண்டான்.

இவ்வாறு மூவரும் மூன்றுவிதமான பாவச்செயல்களைச்செய்தனர். இப்பாவச்செயல்களைப் புரியவேண்டாம் என்று சில சிவபக்தர்கள் கூறிய அறிவுரைக்கும் அவர்கள் செவிசாய்க்கவில்லை. மூன்று சிவபக்தர்கள் இத்தீய செயல்களைக் காணச் சகியாமல் உயிர்நீத்தனர்.

அரசன் கீலகன் நாடுதிரும்பினான். திருக்கோயிலுக்கு இழைக்கப்பட்ட அநீதிகளால் துயரங்கொண்ட சில சிவபக்தர்கள் அரசனிடம் அவனது புதல்வர்களின் தீயசெயல்களை எடுத்துரைத்தனர்; மூன்று சிவபக்தர்கள் உயிர்நீத்த விதத்தையும் கூறினர். அதுகேட்டு அரசன் பெருந்துயரமுற்றான். தனது புதல்வர்கள் சிவாபராதம் செய்துவிட்டார்களே என்று மிகவும் வருந்தினான். அவனது துயரம் பெருங்கோபமாக மாறிற்று. தன் புதல்வர்களுக்கும் அவனது பணியாட்களுக்கும் கடுந்தண்டனையளித்தான். தன் பொருளைக்கொண்டு அத்திருக்கோயிலைப் புதுப்பித்தான். பல புதிய அணிகலன்களை ஈசனுக்கு அணிவித்தான். பல மரங்களை வளர்க்கச்செய்தான். புதல்வர்கள் செய்த அநீதிக்கு இச்செயல்களைப் பிராயச்சித்தமாகக் கருதினான்.

ஆனால் தம் புதல்வர்களின் செயல் காரணமாக மூன்று மகாசிவ பக்தர்கள் உயிர்துறந்துள்ளனரே; அதற்குப் பிராயச்சித்தமாக உயிர்த் தியாகம் செய்யவேண்டும் என்று முடிவுகொண்டான் அவன்மனைவியும் அவனது நான்காவது குமாரன் பாபஜித் என்பவனும் அரசனது முடிவை ஏற்றுக்கொண்டனர். மூவரும் கைகோத்துக்கொண்டு தீயில் குதித்தனர். ஆனால் சிவனது அருளால் அத்தீ தண்ணீர்போல் குளிர்ந்தது. அவர்களது உடல்கள் மிக அழகோடு விளங்கின. தேவர்கள் பூமாரிபொழிந்தனர். வானத்தில் வாத்தியகோஷங்கள் முழங்கின. இடபாருடராகப் பரமேசுவரன் அம்மூவருக்கும் காட்சி கொடுத்தனர். "நீண்டகாலம் பூவுலகில் அரசாட்சி புரிந்துகொண்டு இம்மனைவியுடனும் இந்த நல்லபுதல்வனுடனும் சகல இன்பத்தையும் அனுபவித்துவிட்டு மறுமையில் என்னுடைய பதமாகிய கைலையை அடைவாயாக" என்று ஈசுவரன் அருளி மறைந்தார்.

அக்காலத்தில் இவ்வித சிவத்துரோகங்களைச் சிலரே செய்ததாக ஸ்காந்தம் கூறுகிறது. தற்காலத்தில் இவ்வித துரோகங்கள் ஆங்காங்கு நடப்பதை நாம் அறிவோம். இத்துரோகங்களுக்குக் காமக் குரோதங்கள்தாம் காரணம். ஸ்காந்தத்தில் கூறியிருப்பதை நாம் அடிக்கடி ஞாபகப்படுத்திக்கொண்டால் காமக்குரோதங்களுக்கு இடங்கொடுக்காமல் நம் மனத்தைத் தூய்மையாக்கிக்கொள்ளலாம். தீயசெயல்களைச் செய்வதில் அச்சம் ஏற்படலாம்.



# செய்திகள்

## ஆயில்யத் திருநாள் ஆலய வழிபாடு

தருமையாதீனம் 26ஆவது குருமகாசந்நிதானம் ஸ்ரீலஸ்ரீ சண்முக தேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகளின் ஜன்மநட்சத்திர மாகிய ஆயில்யத் திருநாள் ஆலய வழிபாடு, புரட்டாசித்திங்கள் 2 ஆம் நாள் (18—9—79) செவ்வாய்க்கிழமை தருமையாதீனத் திற்குச் சொந்தமான திருப்பறியலூர் அருள்மிகு வீரட்டேசுவரர் திருக்கோயிலிலும், திருச்செம்பொன்பள்ளி அருள்மிகு சுவர்ணபுரீ சுவரர் திருக்கோயிலிலும் விசேஷ அபிஷேக ஆராதனைகளுடன் மிகச் சிறப்பாக நடைபெற்றது. வழிபாட்டின்போது அவ்வத் தலத் திருப் பதிகங்கள் பாராயணம் செய்யப்பெற்றன. திருப்பதிகங்கள் அடங்கிய வெளியீடும் அன்பர்களுக்கு வழங்கப்பெற்றது. திருப்பறியலூரில் திருக்கடவூர் தேவஸ்தானம் திருமுறைப்பணியாளர், திரு. நடராச குருக்களும், திருச்செம்பொன்பள்ளியில் மேற்படி தேவஸ்தானம் திரு. சோமாஸ்கந்த குருக்களும் தலத்திருப்பதிகங்களைப் பாராயணம் செய்தனர். வழிபாட்டின் இறுதியில் ஆங்காங்கும் தருமபுரம் புலவர் திரு. சுவாமிநாதன், தருமையாதீனக் கல்லூரி முதல்வர் வித்துவான் திரு. வி. சா குருசாமி தேசிகர் எம். ஏ. கல்லூரிப் பேராசிரியர், வித்துவான். திரு. எம். சிவச்சந்திரன் எம். ஏ., ஆகியோர் முறையே 'அட்டவீரட்டம்', 'திருமுறைப்பெருமை', 'சோழர் கோயிற் பணிகள்' என்பனபற்றி விரிவுரைகள் நிகழ்த்தினார்கள். அன்பர்கள் வழிபாட்டில் கலந்துகொண்டு தரிசித்தும் கேட்டும் இன்புற்றனர்.

## ஸ்ரீ மகாலட்சுமி துர்க்காதேவிக்கு
## 29 ஆவது சதசண்டி வேள்வி விழா

தருமையாதீனம் ஸ்ரீ அஷ்டாதசபுஜ மகாலட்சுமிதுர்க்காதேவிக்கு வழக்கம்போல் இவ்வாண்டும் 22—9—79 முதல் 1—10—79 முடிய பத்து நாட்களும் நவராத்திரி விழாவை முன்னிட்டு உலகநலம்கருதி, சதசண்டி வேள்வி ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானம் அவர்கள் திருவுளப் பாங்கின்வண்ணம் சிறப்பாக நடைபெற்றது. ஸ்ரீ துர்க்காதேவி சந்நிதியில் மின்விளக்குகளாலும் மலர்களாலும் அலங்கரிக்கப்பெற் றிருந்த வேள்வி மண்டபத்தில் யாக கலசங்கள் வைத்து அலங்கா ௳

ஆராதனைகள் செய்வித்து, சதசண்டி வேள்வி சிறப்பாக நிகழ்ந்தது. நாடோறும் சுவாசினீ – குமாரி வடுபூஜைகள், சதுர்வேத பாராயணம், துர்க்காசூக்த பாராயணம், தேவிமகாத்மிய பாராயணம், திருமுறைப் பாராயணம், அபிராமி அந்தாதி பாராயணம், ஸ்ரீ துர்க்காதேவிக்கு லட்சார்ச்சனை, ஸ்ரீ வித்தியாசக்ரமாகிய மேருவிற்குச் சகஸ்ரநாமார்ச்சனை மற்றும் விசேஷ அபிஷேக அலங்கார ஆராதனைகள் ஆகியன நடைபெற்றன.

30—9—79 ஞாயிற்றுக்கிழமை நண்பகலில் சப்தசதிஹோமமும், மகாபூர்ணுகுதியும் நிகழ வேள்வி இனிது நிறைவுற்றது. 1—10—79 திங்கட்கிழமை விஜயதசமியன்று நண்பகல் ஸ்ரீ துர்க்காதேவிக்குக் கலசாபிஷேகமும் விசேட அலங்கார ஆராதனைகளும் நிகழ்ந்தன. நாடோறும் இரவு வழிபாட்டின்போது ஆனந்ததாண்டவபுரம், பிர்மஸ்ரீ. பி. இராமதாசஐயர் அவர்கள் தொடர்ந்து தேவிபாகவத விரிவுரை நிகழ்த்தினுர்கள். ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானம் அவர்கள் இருவேளைகளிலும் எழுந்தருளி வழிபாடாற்றி அருட்பிரசாதம் வழங்கியருளினுர்கள்.

## ஆதீனக் கல்வி நிலையங்களில் கலைமகள் விழா

ஆதீனக் கல்வி நிலையங்களாகிய வேத சிவாகம பாடசாலை, தேவாரப் பாடசாலை, ஸ்ரீ குருஞானசம்பந்தர் தொடக்கப்பள்ளி, ஸ்ரீ குருஞானசம்பந்தர் உயர்நிலைப் பள்ளி, ஆதீனப் பல்கலைக் கல்லூரி இவைகளின் சார்பில் நவராத்திரி நாட்களில் கலைமகள் விழா கொண்டாடப்பெற்றது. நாடோறும் மாலை மணி 3-30 முதல் தருமையாதீனம் திருநெறிய தெய்வத் தமிழ் மன்றத்தில் விழா சிறப்பாக நடைபெற்றது. ஒவ்வொருநாளும் முறையே தொல்காப்பியர், இளங்கோ அடிகள், திருவள்ளுவர், கம்பர், சேக்கிழார், கச்சியப்பர், குமரகுருபரர், சிவப்பிரகாசர், தாயுமானுர், குருஞானசம்பந்தர் திருநாட்களாக நிகழ்ந்தது. மாயூரம் அ. வ. அ. கல்லூரிப் பேராசிரியர். திரு. அ. கலியபெருமாள் எம். ஏ., தமிழ்த்துறைத் தலைவர் திரு. தி. வ. காந்திமதிநாதன் பி. ஏ., ஆனர்சு., மாயூரம் வழக்குரைஞர் திரு. R. சிவபுண்ணியம் எம். ஏ., பி. எல்., அ. வ. அ. கல்லூரித் தமிழ் விரிவுரையாளர் டாக்டர். திரு. சொ. சிங்காரவேலன் எம். ஏ., பிஎச் டி., ஆதீனக் கல்லூரி முதல்வர், வித்துவான். திரு வி. சா, குருசாமி தேசிகர் எம். ஏ., மாயூரம் டாக்டர். திரு. எம். சுவாமிநாதன் எம். பி. பி. எஸ்., அ. வ அ. கல்லூரித் தமிழ் விரிவுரையாளர், திரு. சொ. முத்தையன் எம். ஏ,, தருமபுரம் ஸ்ரீ குருஞானசம்பந்தர் உயர்நிலைப்பள்ளித் தலைமையாசிரியர் திரு. டி. விவேகானந்தம் பி. ஏ., பி. டி. ஆகியோர் முறையே சிறப்புரை நிகழ்த்திச் சிறப்பித்தனர்.

ஆதீனக் கல்விநிலைய ஆசிரியர்கள், மாணவ-மாணவிகள் அந்தந்தத் திருநாளை ஒட்டி ஏற்றதலைப்புக்களில் விரிவுரைகள் நிகழ்த்தினர்கள் மாணவ மாணவிகளின் கலா நிகழ்ச்சிகளும் நாடோறும் சிறப்பாக நடைபெற்றன.

## ஆதீனக் கோயில்களில் நவராத்திரி விழா

நவராத்திரித் திருநாளை முன்னிட்டுத் திருக்கடவூர், வைத்தீசுவரன்கோயில், சீகாழி, திருவையாறு, திருப்பனந்தாள், திருபுவனம், குத்தாலம், பேரளம் முதலாகிய தலங்களிலுள்ள ஆதீனத் திருக்கோயில்களில் ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானம் அவர்களின் திருவுளப் பாங்கின்வண்ணம் உலக நலம் கருதி அம்பாளுக்கு அருச்சனையும், விசேஷ அபிஷேக அலங்கார ஆராதனைகளும் சிறப்பாக நடைபெற்றன. ஆங்காங்கும் அருள்மிகு அம்மையின் பெருமையை மக்கள் அறிந்து வழிபட்டு உய்ய அறிஞர்களைக்கொண்டு சமயவிரிவுரைகளும் நிகழ்த்தப்பெற்றன.

திருக்கடவூரில் திருவாரூர் திரு. கே. சாம்பசிவம் பி. ஏ., பி. டி., சீகாழியில் திருப்பனந்தாள் புலவர். திரு. மு. சுந்தரேசம் பிள்ளை, திருவதிகை வித்துவான். திரு. ந. சண்முகசுந்தர தேசிகர், வைத்தீசுவரன்கோயிலில் வித்துவான். திரு. மு. சுந்தரராசன் எம். ஏ, அண்ணுமலைப் பல்கலைக் கழகம். மகாவித்துவான். திரு. சி. அருணை வடிவேலு முதலியார், திருபுவனத்தில் சென்னை கயப்பாக்கம் திரு. க. சோமசுந்தரம் செட்டியார் திருவதிகை திரு. ந. சண்முகசுந்தர தேசிகர், குத்தாலத்தில் தருமை வித்துவான். திரு. வி. சா. குருசாமி தேசிகர் எம். ஏ., பேரளத்தில் மாயூரம் டாக்டர் திரு. சொ. சிங்கார வேலன் எம். ஏ., பிஎச், டி., திருவையாற்றில் திருச்சி வித்துவான். திரு. மு. வைத்தியநாதன், திருவாரூர் திரு. கே. சாம்பசிவம் பி. ஏ., பி. டி., மாயூரம் வள்ளலார்கோயிலில் வித்துவான். திருமதி. ப நீலா எம். ஏ, திருப்பனந்தாளில் கயப்பாக்கம் க. சோமசுந்தம் செட்டியார், திருவையாறு வித்துவான். திரு. சு. சுவர்ணகாளீசுவரன் ஆகியோர் விரிவுரை நிகழ்த்தினர்.

## ஆதீனத் திருக்கோயில்களில் நிறைபணிவிழா

புரட்டாசித் திங்கள் பௌர்ணமி நாளன்று இறைவனுக்குச் சிறந்த முறையில் நிகழ்த்தப்பெறுவது. சந்நிதியில் மலர்ப்பந்தல் அமைத்து இளநீர், காய், கனி முதலியவைகளைத் தொங்கவிட்டு அழகுபெறச்செய்தும், இறைவனுக்கு அபிஷேக அலங்காரங்கள் நிறைவுறச் செய்தும் கொண்டாப் பெறுவது இவ்விழா. திருமால்

இறைவனைப்பூசித்து அருள்பெற்ற இந்நன்னாளில் திருமால் ஆணைப் படி பிரமன் இந்திரன் முதலிய தேவர்களும் பூசித்து நலம்பெற்றார்கள் என்று சிவரகஸ்யம் கூறுகிறது. சீகாழி, வைத்தீஸ்வரன்கோயில், திருக்கடவூர், திருபுவனம், தருமபுரம் முதலிய ஆதீனத் திருக்கோயில் களில் பௌர்ணமியன்று இவ்விழா மிகச் சிறப்பாக நிகழ்ந்தது. அன்பர்கள் பலரும் வழிபட்டு இன்புற்றனர்.

**சென்னை, தருமையாதீன சமயப் பிரசார நிலையத்தில்:**

## நாயன்மார்கள் குருபூஜை விழா

குங்குலியக்கலய நாயனார் குருபூஜை 1—9—79 அன்றும் ஏனாதிநாத நாயனார் குருபூஜை 30-9—79 அன்றும் பேராசிரியர் A. அய்யாசாமி M. A.. அவர்கள் பெரியபுராணத்தை வாசித்து விளக்க உரை ஆற்றினார். நிலைய அன்பர்களும் அப்பர் குருகுல மாணவர்களும் கேட்டுப் பயன் அடைந்தனர்.

## கிருத்திகைப் பிரசாதம் வழங்கும் விழா

13—9-79 மாலை 6-30 மணி அளவில் விழா ஆரம்பமாயிற்று தேவார இசைமணி புலவர்இராமலிங்கமும், திரு. N. ராமமூர்த்திஐயர் அவர்களும், வேளூர் தேவாரப் பதிகங்களைப் பாராயணம் செய்தனர். ஸ்ரீமத் நிலைய சுவாமிகள் வரவேற்பிற்குப்பிறகு, அமெரிக்காவிலிருந்து வந்த யோகி இராமையா அவர்கள் தலைமைவகித்துப் பேசும்போது, பதினெட்டுச் சித்தர்களும் முருகப்பெருமானையே தியானம் செய்து, யோக சித்தி பெற்றவர்கள்; வேளூரில் தன்வந்தரி என்றசித்தர் அடக்க மாகி இருக்கிறார்; அதனால் மூர்த்தி சாந்நித்தியம் ஏற்பட்டிருக்கிறது; முருகனை முறையாக உபாசித்து யோகாசனத்தின்மூலம் தியானம் செய்தால், முருகனுடைய தரிசனம் கிடைக்கும்; அதனால், இளமை யோடு அழகொடு விளங்கலாம்; அழியாப்பேரின்ப நிலையை எய்த லாம் என்ற கருத்துக்களை எடுத்துக் கூறி இவ்வாண்டு, அகில உலக சர்வ சமய மாநாடு வேளூர் ஸ்ரீ வைத்தீசுவரன் கோயிலில் அனுமதி பெற்று நடத்தப்போவதாகவும் கூறினார். அமெரிக்காவிலிருந்து வந்திருந்த இரண்டு ஆங்கிலத் துறவிகள் ஆசனங்களைப் போட்டு, இராம பஜனைசெய்து "எப்படி யோகத்தில் அமர்ந்து தியானம் செய்ய வேண்டும் என்று விளக்கிக் காட்டினர். முடிவில் தலைவர், சித்தர் வழியில் முருகப்பெருமானை யோகாசனமுறையில் உபாசனைசெய்தால் எந்த வியாதியும் வாராமல் தடுக்கமுடியும்; பேரின்பநிலையும் அடைய முடியும் என்று கூறினார். ஸ்ரீமத் நிலையசுவாமிகள் நன்றி உரைக்குப் பின் பிரசாதம் வழங்கக் கூட்டம் நிறைவுற்றது.

# மாதாந்திர சமயப்பிரசார வழிபாட்டு விழா

23—9—79 ஞாயிற்றுக்கிழமை காலை 8-30 மணி முதல் 12-30 மணிவரையில் சென்னை - 2 சிந்தாதிரிப் பேட்டை நெ. 80, ஐயா முதலித் தெருவில் உள்ள ஸ்ரீ முருகவேள் எனவழங்கும் ஸ்ரீ குமரவேள் ஆலயத்தில் மாதாந்திர வழிபாடு சிறப்பாக நடைபெற்றது.

ஸ்ரீ அபிராமி சமேத ஸ்ரீ அமிர்தகடேசுவர சுவாமிக்கும் ஸ்ரீ முருகப் பெருமானுக்கும் அபிஷேகங்கள் நடைபெற்றன. முறையாக எல்லாச் சந்நிதிகளிலும் அர்ச்சனை நடைபெற்றது. புலவர் இராமலிங்கமும், கௌரி குழுவினரும், திருமுறை, அபிராமி அந்தாதி, நாமாவளி பஜனைகளை முறையாகப்பாடி எல்லோரையும் மகிழ்வித்தனர். வழிபாடு நடந்த பின்னர் சுமார் 11-மணி அளவில் சமயப்பிரசாரக் கூட்டம் நடந்தது. திரு. R. சிவஞானம் செட்டியார் வரவேற்புரை கூறியபின் பிரசங்கபூபதி திரு. A. மாதவன் அவர்கள் மண்ணில் நல்லவண்ணம் வாழ்வதற்கு வழிபாடு பேருதவிசெய்கிறது; நால்வர் பாடிய அருள்மிகு பாடல்களை உள்ளமுருகிப் பாடி வழிபாடு செய்தால், இறையருள் கிட்டிவிடும்; இதனல் இம்மைக்கும், மறுமைக்கும், எழுமைக்கும், ஆன்மீகலாபத்தை அடைய முடியும்; இம்மாத வழிபாட்டின்மூலமாக. நமது சந்ததிகளையும், உற்றார் உறவினர்களையும் தெய்வீக விழாக் களில் ஈடுபடுத்தி, தெய்வ நம்பிக்கை ஊட்டமுடியும்; நம்பிக்கையே நம் சந்ததிகட்கு நாம் வைக்கக்கூடிய அழியாத சொத்து; சிலருக்கு நூற்றாண்டு விழா எடுத்து கொள்கைகளைப்பரப்பும் நேரத்தில், நமது ஆசாரிய புருஷர்களாகிய சமய வேந்தர்களின் கொள்கைகளையும் சமயத்தின் பெருமைகளையும் மக்கள் உள்ளம் கவரும்வண்ணம், பிரசாரம் செய்யவேண்டியது தலையாய கடன்; அதனல் சைவ அன்பர்கள் ஒவ்வொருவரும், சென்னை சமயப் பிரசார நிலையத்தின் வழிபாட்டில் கலந்துகொண்டு சமய நெறிகளை வளர்த்து சமய உண் மைகளை மக்களுக்கு எடுத்துரைக்கவேண்டும். சென்னை பிரசார நிலை யத்தில் நடக்கும் வழிபாடுபோல் மற்ற இடங்களிலும் ஆங்காங்குள்ள அன்பர்கள் நடத்தி ஆஸ்திகத்தை வளர்க்கவேண்டியது கடமை யாகும் என்று கூறினர்கள்.

அடுத்துப்பேசிய சிம்மக்குரல் சீதாபதி கூட்டுவழிபாட்டின்மூலம் மக்கள் ஒருகணமாவது கவலையை மறந்து ஒன்றியிருந்து நினைக்க முடிகிறது என்பதை விளக்கிப்பேசினர்கள்.

அடுத்துப்பேசிய R. கௌரி "தனந்தரும் கல்விதரும்" என்ற அபிராமி அந்தாதிப் பாடலைப்பாடி அன்னை அபிராமியின் கருணைத் திறத்தை விளக்கிக் கூறினர்.

## நவராத்திரி விழா

22—9—79 முதல் 30—9—79 வரை நவராத்திரி விழா மிகச் சிறப்பாக நடந்தது. முதல்நாள் சென்னை உயர்நீதிமன்ற நீதிபதி, கனம். திரு. செங்கோட்டுவேலன் அவர்கள் அபிராமி அந்தாதி போன்ற பக்தி இலக்கியங்கள் மக்கள் உள்ளத்தில் இடம் பெறவேண்டும்; அப்பொழுதுதான் அன்புநெறியில் வாழ்ந்து மக்கள் ஆன்மலாபத்தைப் பெறமுடியும்; அந்த அடிப்படையில் தருமபுர ஆதீனம் ஸ்ரீலஸ்ரீ மகாசந்நிதானம் அவர்கள் இந்த நிலையத்தை அருள் ஆட்சி செய்கின்றார்கள்; கடந்த 25 ஆண்டுகளாக இந்த நிலையம் சமயத் துறையில் பாராட்டுமளவிற்கு நற்பணிகளைச் செய்துவந்திருக்கின்றது; இம்மாதிரியான நிலையத்தின் மூலமாகத்தான் ஆன்மீக நெறியில் மக்களை ஈடுபடுத்த முடியும் என்று கூறி நவராத்திரி விழாவைத் தொடங்கிவைத்தார்கள்.

புலவர் பருத்தியூர் திரு K. சந்தானராமன் அவர்களும், திருமதி. ஹேமா சந்தானராமன் அவர்களும் ஒன்பது நாட்களிலும் அபிராமி அந்தாதிப் பேருரை ஆற்றினார்கள்.

30—9—79 நிறைவுநாள் அன்று வழக்கறிஞர் திரு. தெய்வசிகாமணி M. A., B. L. அவர்கள் தலைமைவகித்து இந்த நிலையம் இருபத்தைந்து ஆண்டுகளில் செய்துவந்திருக்கும் ( தாண்டுகளைப்பாராட்டிப் பேசி. சென்னை நகருக்கே ஒரு கலங்கரை விளக்கமாக இந்த நிலையம் விளங்கிவருகிறது; அதற்குச் சிறப்பாகத் தியாகராயநகர் மக்களும் சென்னைவாழ் பேரன்பர்களும் பெரும் பங்கெடுத்துக்கொண்டு வெள்ளி விழாவை நடத்தவேண்டும் என்றுகேட்டுக்கொண்டு, கொடைவள்ளல் திரு. செங்கல்வராய செட்டியார் போன்றவர்கள் மனம்வைத்தால் இங்கு ஒரு பெரிய மண்டபமே உருவாக்கமுடியும் அதற்கு அவர்கள் ஆவன செய்வார்கள் என்றும் கூறினார்கள்.

பின்னர் வாழ்த்துரைவழங்கிய அறநெறிப்புலவர் திரு. செங்கல்வராய செட்டியார் அவர்கள் நிலையப் பணிகளையும் நவராத்திரி நிகழ்ச்சிகளையும் பாராட்டி, தன்னால் முடிந்த அளவு நிலையத்திற்கு உதவி செய்வதாகக்கூறினார்.

ஒன்பது நாட்களிலும் நிலைய அன்பர்கள் உபயமாக அபிராமி அம்பாளுக்கு லலிதா சஹஸ்ரநாம அர்ச்சனையும் வழிபாடுகளும் சிறப்பாக நடந்தன. நிலையசுவாமிகள் ஒவ்வொருநாளும் வரவேற்புரை முடிவுரை கூறினார்கள்.

---

# எதிர்காலம்

## ஜோதிஷம் திரு. A. இராசமாணிக்கம்

ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் நடுநிலைப்பள்ளி, திருப்பனந்தாள்.

**சித்தார்த்தி ஹு ஐப்பசிமீ 1உ முதல் 30உ முடிய.**

**( 18—10—79 முதல் 16—11—79 முடிய )**

ஸ்ரீ சித்தார்த்திஹு புரட்டாசிமீ 31உ புதவாரம் பூர நக்ஷத்திரம் தைதுலை கரணம் கூடிய காலத்தில் சூரிய உதயம் முதல் 51 நாழிகை 5 விநாடிக்கு சிம்ம லக்கினத்தில் ஸ்ரீ லோகரட்சகரான சூரியபகவான் லோக சுபிட்சார்த்தத்தை முன்னிட்டு, கன்னியாராசியிலிருந்து துலா ராசி சங்கிரமணமாக ஐப்பசிமாதப் பிரவேசம் செய்கிறார். மறுதினம் ஐப்பசிமீ 1உ விஷு புண்ணியகாலம் ஆகும். ரஸாதிபதி குருபகவான் ஆகிறார். சங்கிரமகாலகிரகஸ்திதியின் பலனாவது உலகம்பூராவும் நல்ல மழைபெய்து பயிர்களின் விளைவு மிகும். பிரஜைகட்கு சுபிட்சமும் ஆரோக்கியமும் ஏற்படும். தேசபரிபாலனத்தில் ஆன்றோர்களின் பரந்த ஜனரட்சக செயல் முறைகளில் பிரஜைகளுக்கு ஜீவனோபாயங் கள் வேலைவாய்ப்புகள் ஏர்பட்டு நாடுகளில் அமைதி நிலவும். தேசங் களில் எங்கும் ஆங்காங்கு தர்மஸ்தாபனங்களில் தர்மகர்த்தாக்களி னால் தர்மங்களும் தெய்வ கைங்கர்யங்களும் செவ்வையாக நடை பெற்று வரும்.

உலகிலுள்ள திருமடங்கள் ஆசாரிய பீடங்களில் உள்ள சிவ ஞானபரமாசாரியர்கள் குருமகாசந்நிதானங்களின் தெய்வீகத் திரு வுளப்பாங்கில் லோகத்துக்கு இயம்புகின்ற உயர் வழியில் இவ்வுலக மானது இயங்கும்; அன்னார்வழி கடைப்பிடிக்கின்ற சிவநேசச் செல் வர்கள் அரச பரிபாலனாதி நற்கர்மங்கள் கைவல்யமானவர்களாகி, சிறந்து சிந்தை தெளிவுடையவர்களாக இலட்சுமிகரம் பொருந்தி உயர்வார்கள். தேசங்களிலெங்கும் தேவாலயங்களில் நித்தியம் ஆறு கால பூசைகள் விசேஷகால சிறப்புப்பூஜைகள் மகத்துவமாக நடை பெற்றுவரும். எல்லாப்பிரஜைகளும் ஈஸ்வரபக்தி உடையவர்களாகிப் புனிதமான வாழ்க்கை நடத்துவார்கள்.

**1. மேஷம் :- அசுவதி - பரணி - கார்த்திகை ¼**

( சு. சே. சோ. லா. - லி. லு. லே லோ. - அ. )

மேஷராசி 9 பாதங்களும் மிச்சிரபலனாக நடக்கும். குடும்பாபி விருத்தியில் கண்யமாகப் பணவருமானங்கள் வந்துகொண்டிருக்கும்.

பெற்ருேர் அம்மான் குருமார்கள் சம்பந்தமாக அவசிய செலவினங்களும் ஏற்படும். நெஞ்சுவலிவந்து உடன் குணமாகும். ஸ்ரீ சுப்பிரமணிய சுவாமிக்கு அருச்சனை செய்ய நலம் தரும். 14உக்கு மேல் வாகனப்பிராப்தி ஒன்று ஏற்படும். பூமி இயந்திரங்களில் நற்பலன் வந்து சேரும். மனைவிக்கு கர்ப்பம் ஏற்படும். தெய்வபக்தி மேலிடும். ஐப்பசிமீ 6உ 11 நாழிகை 56 விநுடி முதல் 8உ 28 நாழிகை 33 விநுடி வரையில் சந்திராஷ்டமம். வெள்ளி சனி சுபமாகும்.

**2. ரிஷபம் :- கார்த்திகை $\frac{3}{4}$ - உரோகிணி - மிருகசீர்ஷம் $\frac{1}{2}$**

**( இ. ஊ. ஏ. - ஒ. வ. வி. வூ - வே. வோ. )**

ரிஷபராசி 9 பாதங்களும் சுபபலனுக நடக்கும். குடும்பாபிவிருத்தியில் பணவருமானங்கள் திருப்திகரமாக வந்துகொண்டிருக்கும். சகோதரருக்கு நல்ல நிலைமையை ஏற்படுத்தும். பந்து அம்மான்களின் பிரீதி மகிழ்ச்சியளிக்கும். வித்தியா வியாபாராதி கலைத்துறைகளில் முன்னேற்றஸ்திதியாகஇருந்துவரும். பூமிஇயந்திரங்களில் நற்பல பிராப்தியையளிக்கும். தாரபுத்திரர்களின் சௌக்கியம் நன்ருக இருந்துவரும். ஐப்பசிமீ 8உ 28நாழிகை 33 விநுடி முதல் 10உ 39நாழிகை 32 விநுடி வரையில் சந்திராஷ்டமம். ஞாயிறு திங்கள் சுபமாகும்.

**3. மிதுனம் :- மிருகசீர்ஷம் $\frac{1}{2}$ - திருவாதிரை - புனர்பூசம் $\frac{3}{4}$**

**( கா. கி. - கு. க. ங. ச்சா. - கே. கோ. ஹ. )**

மிதுனராசி 9பாதங்களும் மிச்சிரபலனுக நடக்கும். குடும்பாவிருத்தியில் ஓரளவிற்கே பணவருமானமும் முன்னேற்றமும் காணும். சகோதரர் விரோதம் சொத்துத் தகராறுகள் எதிர்ப்பாளர்களின் தொல்லைகள்வந்து மாதப்பின்பகுதியில் நிவர்த்தியாகும். ஞாயிற்றுக்கிழமை சூரியார்ச்சனை செய்ய நல்லன ஏற்படும். தாரபுத்திரர்களின் சௌக்கியம் நன்ருக இருந்துவரும். ஐப்பசிமீ 10உ 39 நாழிகை 32விநுடி முதல் 12உ 46நாழிகை 59 விநுடிவரையில் சந்திராஷ்டமம். புதன், வியாழன் சுபமாகும்.

**4. கடகம் :- புனர்பூசம் $\frac{1}{4}$ - பூசம் - ஆயில்யம்.**

**( ஹி. - ஹு. ஹே. ஹோ. ட. - டி. டு. டே. டோ. )**

கடகராசி 9 பாதங்களும் சுபபலன்தரும். பணவருமானம், செந்நெல் பிராப்த்தியில் நல்லநிலைமையை ஏற்படுத்தும். சகோதரர் நலம் நன்ருக இருந்துவரும். எழுத்துமூல காரியங்களில் துரிதமான நடைமுறையை ஏற்படுத்தும். அந்தஸ்து உயர்வை அளிக்கும். நூதன வஸ்துவின் பிராப்தியையளிக்கும். ஸ்ரீ சுப்பிரமணிய சுவாமிக்கு அருச்சனைசெய்துவர சிரசில் இடிபடுதல் அல்லது இரத்தக்கொதிப்பு

போன்றவைநீங்கும். தாரபுத்திரர்களின் சௌக்கியம் நன்ருக இருந்து வரும். ஐப்பசிமீ 12உ 46நாழிகை 59விஞடிமுதல் 14உ 52நாழிகை 50 விஞடி வரையில் சந்திராஷ்டமம். வெள்ளி, சனி சுபமாகும்.

**5. சிம்மம் :- மகம் - பூரம் - உத்திரம் ¼**

**( ம. மி. மு. மே. - மோ. ட. டி. டு. - டே. )**

சிம்மராசி 9பாதங்களும் சுபபலன் தரும். குடும்பாபிவிருத்தியில் பணவருமானங்களில் சாதாரண நிலைமையாயினும் கண்ய நிலைமை யிலேயே வரவாகிக்கொண்டிருக்கும். சொந்த சௌகரியத்தில் சகோ தரர் நலனில் ஓரளவு பணம் முடங்கும். மாதப் பின்பகுதியில் வீடு வாகனப்பிராப்திகளின் சௌக்கியம் நன்ருக இருந்துவரும். ஐப்பசிமீ 14உ 52நாழிகை 50விஞடி முதல் 16உ 59 நாழிகை 29 விஞடி வரையில் சந்திராஷ்டமம். ஞாயிறு, திங்கள் சுபமாகும்.

**6. கன்னி :- உத்திரம் ¾ - ஹஸ்தம் - சித்திரை ½**

**( டோ. ப. பி. - பு. ஷ. ண. ட. - பே. போ. )**

கன்யாராசி 9 பாதங்களும் மிச்சிரபலனுக நடக்கும். குடும்பாபி விருத்தியில் பணவருமானங்கள் வந்துகொண்டிருக்கும். சகோதரர் களின் விசுவாசம் ஒத்துழைப்பு பலம்தரும். வித்வத்தும் கலைத்துறை களில் பிரசித்தம் ஏற்படும். வீடுவாகனுதிகளில் சௌகரியம் நன்ருக இருந்துவரும். புத்திரர் புத்திரிகளின் சுபத்தில் முக்கிய செலவினங் கள் ஏற்பட்டுக்கொண்டிருக்கும். கணவன் மனைவியரிடையே மன வருத்தசம்பவம் வந்து உடன் சுமுகமாகும். ஐப்பசிமீ 16உ 59 நாழிகை 22 விஞடிமுதல் 19உ 9 நாழிகை 5 விஞடி வரையில் சந்திராஷ்டமம். புதன் வியாழன் சுபமாகும்.

**7. துலாம் :- சித்திரை ½ - சுவாதி - விசாகம் ¾**

**( ர. ரி. - ரு. ரே. ரோ. தா. - தி. து. தே. )**

துலாராசி 9 பாதங்களும் சுபபலன் தரும். குடும்பாபிவிருத் தியில் பணவருமானங்களில் 14உ முதல் நல்லநிலைமையை ஏற் படுத்தும். சகோதரர் உத்தியோகம் தொழில்துறைகளில் பிரக்கியாதி யாக இருந்துவருவர். வாகன சுகம் திருப்தியளிக்கும். புத்திரர் பௌத்திரர்களினுல் சந்தோஷம் நிலவும். தாம்பத்திய வாழ்க்கை தெய்வபக்தியாக நடந்துவரும். ஐப்பசிமீ 19உ 9 நாழிகை 5 விஞடி முதல் 21உ 23 நாழிகை 36 விஞடி வரையில் சந்திராஷ்டமம். வெள்ளி சனி சுபமாகும்.

**8. விருச்சிகம் :- விசாகம் ¼ - அனுஷம் - கேட்டை.**

**( தோ. - ந. நி. நு. நே. - நோ. ய. யி. யு. )**

விருச்சிகராசி 9 பாதங்களும் மிச்சிரபலனுக நடக்கும் குடும்பாபி விருத்தியில் பணவருமானங்கள் வந்துகொண்டிருக்கும். வரினும்

வரவிற்குமுன் செலவினங்கள் காத்துநிற்கும். சகோதரருக்குச் சொற்ப மனக்குறைகள் ஏற்பட்டு உடன் நிவர்த்தியாகும். மனைவிநலம் அம்மான்களின் நலன்களில் கௌரவச் செலவுகள் அதிகமாகும். 14உ க்கு மேல் ஸ்திரி சொத்தில் நற்பலன் வரும். புத்திரர்களின் சௌக்கியம் நன்ருக இருந்துவரும். ஐப்பசிமீ 21உ 23 நாழிகை 36 விஞடிமுதல் 23உ 44 நாழிகை 3 விஞடி வரையில் சந்திராஷ்டமம். ஞாயிறு திங்கள் சுபமாகும்.

**9. தனுசு :- மூலம் - பூராடம் - உத்திராடம் $\frac{1}{4}$**

**(யே. யோ. பா. பி. - பு. த. ப. ட. - பே.)**

தனுர்ராசி 9 பாதங்களும் மிச்சிரபலனுக நடக்கும். குடும்பாபி விருத்தியில் மாத முதலில் பணவருமானங்களை ஏற்படுத்தும். பின் பகுதியில் டாம்பீகச்செலவை ஏற்படுத்தும். சகோதரர்நலம் சாதாரணமாக இருந்துவரும். வாகன சௌகரியம் திருப்தியளிக்கும். புத்திரர்களின் உடல்நலம் பாதித்துத் தேரும். இராசிக்கு ஓர்விபத்து வந்து தப்பும். தாம்பத்திய வாழ்வில் சுமுகம் நிலவும். ஐப்பசிமீ 23உ 44 நாழிகை 3 விஞடி முதல் 26உ 10 நாழிகை 18 விஞடி வரையில் சந்திராஷ்டமம். செவ்வாய் புதன் சுபமாகும்.

**10. மகரம் :- உத்திராடம் $\frac{3}{4}$ - திருவோணம் - அவிட்டம் $\frac{1}{2}$**

**(போ. ஜ. ஜி. - கி. கு. கே. கோ. - கா. கி.)**

மகரராசி 9 பாதங்களும் சுபபலன் தரும். குடும்பாபி விருத்தியில் பணவருமானங்களில் நல்ல நிலைமையை ஏற்படுத்திக்கொண்டிருக்கும். சகோதரர் மனக்குறை வருதல் சரிபடுதல் ஆகும். பூமி இயந்திரங்களில் விருத்திபலன் காணுவிடினும் சாதாரணமாகஉள்ள வருமானங்கள் வந்து சேரும். 14உ முதல் பழைய பாக்கிகள் வசூலாகுதல் காண்ட்ராக்ட் ஒப்பந்தங்கள் ஏற்படுதல் ஆகும். தாரபுத்திரர்களுக்குச் சௌக்கிய பலன் தரும். ஐப்பசிமீ 1, 2, 26, 27, 28 உகள் சந்திராஷ்டமம். வியாழன் வெள்ளி சுபமாகும்.

**11. கும்பம் :- அவிட்டம் $\frac{1}{2}$ - சதயம் - பூரட்டாதி $\frac{3}{4}$**

**(கு, கே. - கோ. ஸ. ஸி. ஸு. - ஸே. ஸோ. தா.)**

கும்பராசி 9 பாதங்களும் சுபமான பலனைத்தரும். குடும்பாபி விருத்தியில் பண வருமானங்கள் வேண்டிய அளவிற்கு வந்து கொண்டிருக்கும். இல்லத்தில் சுப மங்கள காரியங்கள் நடக்கும். சகோதரருக்கு நல்லன ஏற்படும். வீடு வாகனப் பிராப்தியில் விசேஷ பலனை ஏற்படுத்தும். புத்திரனுக்கு அரசாங்க நிர்ப்பந்த அலுவல்கள் வந்து ஜெயானுகூலத்துடன் நிறைவேறும். தாம்பத்திய வாழ்வில் சுமுகம் நிலவும். ஐப்பசி மீ 2, 3, 29, 30 தேதிகள் சந்திராஷ்டமம். செவ்வாய் புதன் சுபமாகும்

12. மீனம் :- பூரட்டாதி ¼- உத்திரட்டாதி - ரேவதி.
( தி. - து. ஸ. ச. த. - தே. தோ. ச. சி. )

மீனராசி 9 பாதங்களும் மிச்சிரபலனாக நடக்கும். குடும்பாபி விருத்தியில் பண வருமானங்கள் சீராக இருந்துவரும். சகோதரர் நலம் நன்ருக இருந்துவரும். வீடு மனை இவற்றில் விவாதங்கள் ஏற்படினும் சாதகபலன் ஏற்படும். எல்லாக்காரியங்களும் சர்ச்சைக் கிடையே பூரணமாக நடக்கும். புத்திரனின் போக்கில் மனவேக நிலைமையாயினும் பின் சரிப்பட்டு ஆறுதல் ஆகும். ஐப்பசி மீ 3உ 49 நாழிகை 16 விநாடி முதல் 6உ 11 நாழிகை 56 விநாடி வரையில் சந்திராஷ்டமம், வியாழன் வெள்ளி சுபமாகும்.

---

மதிப்புரை:

# மொழிக்கு மொழி தித்திக்கும் மூவர் தமிழ் மாலை

வரிசை எண். 6. உரையுடன் வெளியிடுபவர் :— பிர்மஸ்ரீ. S. வேங்கடேச சர்மா. 5 - டெலிபோஸ்ட் காலனி, குறுக்குத்தெரு, மேலமாம்பலம், சென்னை 33. விலை ரூ. 2—00. பக்கங்கள் 80.

பன்னிரு திருமுறைகளில் முதல் ஏழு திருமுறைகளாகிய சம்பந்தர் அப்பர் சுந்தரர் அருளிய தேவாரத் திருப்பதிகங்களைப் பொழிப்புரை விசேடவுரை பதிகவரலாறு தலவரலாறு புராணவரலாறு முதலிய உரை விசேடங்களுடன் 108 தமிழ்மாலைகளாகப் பிரித்துச் சிவபெருமானின் திருநாமங்கள் ஒவ்வொன்றுக்கும் ஒருதமிழ்மாலையாகச் சமர்ப்பிக்கும் திட்டத்துடன் திரு சர்மா அவர்கள் இதுவரை 6 மாலைகளைத்தொகுத்து வெளியிட்டுள்ளார். இறைவனது 108 போற்றிகளில் ஓம் வாமதேவாய நமః என்பது ஆருவது போற்றியாகும். இம்மந்திரத்தோடு இம்மாலையையும் சிவபெருமான் திருவடிகளுக்கு சமர்ப்பணம் செய்யும் இந்நூலின் தொகுப்பாசிரியர் திரு. வேங்கடேச சர்மா அவர்களின் பத்திமேம்பாட்டுணர்வைப் பாராட்டவேண்டும். இம்மாலையில் திருமுதுகுன்றத் தேவாரத்திருப்பதிகங்கள் ஏழும் இடம்பெற்றுள்ளன. திருப்பதிகங்களுக்கு எழுதப்பட்டுள்ள கருத்துரைகள் எளிமையும் இனிமையும் உடையனவாய் இறையுணர்வில் நம்மை ஈடுபடுத்தும் சிறப்பினவாய் விளங்குகின்றன.

இறைபணியாக மேற்கொண்டுள்ள திரு. சர்மா அவர்களின் இந்நூற்பணி விரைவில் இனிது நிறைவேற அன்பர்களின் ஆதரவை அவர் இந்நூலில் வேண்டியுள்ளார். ரூ.108 முன்பணமாக அளிப்பவர்களுக்கு வெளிவந்த 6 நூல்கள் முதலிலும் ஏனையன அவ்வப்போது வெளியிடப்படும் காலங்களிலும் அனுப்பப்பெறும் எனவும் கூறியுள்ளார்.

(வி. சா. கு.)

## ஐப்பசி மாதச் சிறப்பு நாட்கள்

18—10—79 வியாழன், துலாவிஷு புண்யகாலம், மாயூரம், வள்ளலார் கோயில், திருவையாறு ஆகிய தலங்களில் துலாவிஷு தீர்த்தம். திருக்கடவூர் காலசங்காரமூர்த்திக்கு அபிஷேகம், சீகாழியில் உமாமகேசுவரருக்கு உச்சிக்காலத்தில் புழு காப்பு. மாயூரம், தலைக்காவேரி முதலிய இடங்களில் துலா ஸ்நான ஆரம்பம். பிரதோஷம்.

20—10—79 சனி, அதிகாலை நரகசதுர்த்தசிஸ்நானம், தீபாவளிப் பண்டிகை. கேதாரகௌரி விரதம். சர்வ அமாவாசை. மாயூரம் - வள்ளலார்கோயில் ஸ்ரீ மேதாதக்ஷிணாமூர்த்தி ஸ்ரீ கங்காதேவியுடன் காவிரியில் தீர்த்தம் கொடுத்தல்.

21—10—79 ஞாயிறு: வேளூர், மாயூரம்-குமரக்கட்டளை, சீகாழி, திருச்செந்தூர், பழநி முதலிய தலங்களில் கந்தசஷ்டி உற்சவ ஆரம்பம். வேளூர் ஸ்ரீ செல்வமுத்துக்குமாரசுவாமிக்கும் மாயூரம் - குமரக்கட்டளை ஸ்ரீ சுப்பிரமணிய சுவாமிக்கும் ஆறு தினங்களில் லக்ஷார்ச்சனை, லட்சுமி குபேரபூஜை.

22—10—79 திங்கள், ஸ்ரீ மெய்கண்டார் குருபூஜை. பெண்ணாகடத்தில் ஸ்ரீ மெய்கண்டாருக்கு விசேஷ அபிஷேக ஆராதனை.

24—10—79 பூசலார் நாயனார் குருபூஜை.

26—10—79 வெள்ளி, கந்தசஷ்டி சூரசங்காரம், வேளூர், மாயூரம், குமரக்கட்டளை, திருச்செந்தூர், பழநி முதலிய தலங்களில் சூரசங்காரம். ஐயடிகள்காடவர்கோன் நாயனார் குருபூஜை.

27—10—79 சனி, வேளூர் கந்தசஷ்டி தீர்த்தம்.

28—10—79 ஞாயிறு, வேளூர் தெய்வயானை திருக்கல்யாணம்.

29—10—79 திங்கள். வள்ளியம்மை திருக்கல்யாணம். கிருதயுகாதி.

30—10—79 செவ்வாய், வேளூர் ஸ்ரீ செல்வமுத்துக்குமாரசுவாமி திருவீதியுலாக் காட்சி.

1—11—79 வியாழன், பிரதோஷம்.

3—11—79 சனி, பௌர்ணமி விரத பூஜை. அன்னாபிஷேகம். திருமூல நாயனார் குருபூஜை, தருமையாதீனம் 7 ஆவது குருமகா சந்நிதானம் ஸ்ரீலஸ்ரீ திருவம்பலதேசிக பரமாசாரிய சுவாமிகள் 9 ஆவது குருமகாசந்நிதானம் ஸ்ரீலஸ்ரீ திருநாவுக்கரசு தேசிக பரமாசாரிய சுவாமிகள் குருபூஜை.

4—11—79 ஞாயிறு, நெடுமாற நாயனார் குருபூஜை.

5—11—79 திங்கள், கிருத்திகைவிரதம். வேளூர், தருமை ஸ்ரீசண்முகர் கிருத்திகை, இடங்கழி நாயனார் குருபூஜை.

7—11—79 புதன், சங்கடஹரசதுர்த்தி, தருமையாதீனம் 22 ஆவது குருமகாசந்நிதானம் ஸ்ரீலஸ்ரீ மாணிக்கவாசக தேசிக பரமாசாரிய சுவாமிகள் குருபூஜை.

10—11—79 சனி, சத்தி நாயனார் குருபூஜை.

11—11—79 ஞாயிறு, தருமையாதீனம் 25 ஆவது குருமகாசந்நிதானம் ஸ்ரீலஸ்ரீ கயிலை சுப்பிரமணிய தேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகள் குருபூஜை. காளாஷ்டமி.

13—11—79 செவ்வாய், திருக்கடவூர் முனீசுவரபூஜை

14—11—79 புதன், திருக்கயிலாய பரம்பரைத் தருமையாதீனம் ஸ்ரீலஸ்ரீ சண்முக தேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகள் ஞானபீடம் அமர்ந்தநாள். தருமையாதீனம் 10 ஆவது குருமகாசந்நிதானம் ஸ்ரீலஸ்ரீ சிவஞான தேசிக சுவாமிகள் குருபூஜை.

16—11—79 வெள்ளி, கடைமுகஸ்நானம், மாயூரம், வள்ளலார்கோயில், திருவையாறு ஆகிய தலங்களில் காவிரியில் கடைமுக

Regd. No. Tn/NM2

# கந்தசஷ்டி விழா

**வைத்தீசுவரன்கோயிலில் :**

தருமையாதீனத்திற்குச் சொந்தமான வைத்தீசுவரன் கோயில் அருள்மிகு வைத்தியநாதசுவாமி திருக்கோயிலில் எழுந்தருளி அருள்வழங்கும் ஸ்ரீசெல்வமுத்துக்குமாரசுவாமிக்குக் கந்தசஷ்டிவிழா 21-10-79 ஞாயிற்றுக்கிழமைமுதல் 30-10-79 செவ்வாய்க்கிழமை முடிய பத்துநாட்கள் மிகச்சிறப்பாக நிகழும். 26-10-79 சூரசங்காரம். 28-10-79 தெய்வயானை திருமணம், 29-10-79 வள்ளியம்மை திருமணம். 30-10-79 ஸ்ரீ செல்வ முத்துக்குமாரசுவாமி வெள்ளிரதத்தில் திருவுலாக்கொண்டருளல். விழா நாட்களில் ஸ்ரீ ஆறுமுகருக்கும் ஸ்ரீ செல்வமுத்துக் குமாரசுவாமிக்கும் சண்முகார்ச்சனையாக லட்சார்ச்சனை நிகழும்.

**மாயூரம் குமரக்கட்டளையில் :**

தருமையாதீனத்திற்குச் சொந்தமான மாயூரம் ஸ்ரீமாயூரநாத சுவாமிகோயில் குமரக்கட்டளை ஸ்ரீ வள்ளி தேவசேனா சமேத ஸ்ரீ சுப்பிரமணிய சுவாமிக்கு 21-10-79 முதல் கந்தசஷ்டி விழா சிறப்பாக நடைபெறும். 25-10-79 இரவு இடபவாகனக்காட்சி. சகோபுர தரிசனம். 26 - 10 - 79 சூரசங்காரம். 27 - 10 - 79 ஸ்ரீ சுப்பிரமணியசுவாமி திருத்தேரில் திருவுலாக்கொண்டருளல்.

11-10-79 வியாழக்கிழமை முதல் ஸ்ரீ சுப்பிரமணியசுவாமிக்குலட்சார்ச்சனை தொடங்கிநடைபெற்றுவருகிறது. 26-10-79 கந்தஷஷ்டியன்று அர்ச்சனை நிறைவுறும். அன்பர்கள் சகஸ்ர நாம அர்ச்சனை ஒன்றுக்கு ரூ. 10—00 செலுத்தி லட்சார்ச்சனையில் கலந்துகொண்டு முருகப்பெருமான் திருவருளைப் பெறுவார்களாக.

Printed & Published by V. Ramaiah Pillai Manager Dharmapuram Adhinam, at the Gnanasambandam Press, Dharmapuram, Mayuram. 10—10 -79.